

உ

சிவமயம்

ஸ்ரீ அன்னபூரணியம்மன் றுணை.

வெற்றிநகரம்

# ஸ்ரீ அன்னபூரணியம்மன்

# அட்டப்பிரபந்தம்.

இவை

ஷை வெற்றிநகர் வாசிகள் கேட்டுக்கொண்டபடி

கல்லல்

ஸ்ரீமணிவாசக சரணாலய சுவாமிகளால்

இயற்றப்பட்டு

திரிசிரபுரம் சைவ சித்தாந்த சபையில்,

தமிழ்த் தலைமைப்பண்டிதர்

திருவாளர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்

அவைத்தலைமையின் கீழ்

பல்பெரும் புலவர் கூட்டத்துள்

அரங்கேற்றப்பெற்று

திரிசிரபுரம்:

ஜெகம் அண்டு கோ, டாட்சன் அச்சாபீசில்

பதிப்பிக்கப்பெற்றன.

1926



சிவமயம்

ஸ்ரீ அன்னபூரணியம்மன் றுணை.

வெற்றிநகரம்

# ஸ்ரீ அன்னபூரணியம்மன்

# அட்டப்பிரபந்தம்.

இவை

ஷை வெற்றிநகர் வாசிகள் கேட்டுக்கொண்டபடி

கல்லல்

ஸ்ரீமணிவாசக சரணாலய சுவாமிகளால்

இயற்றப்பட்டு

திரிசிரபுரம் சைவ சித்தாந்த சபையில் தமிழ்த் தலைமைப்பண்டிதர்

திருவாளர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்

அவைத்தலைமையின் கீழ்

பல்பெரும் புலவர் கூட்டத்துள்

அரங்கேற்றப்பெற்று



திரிசிரபுரம்:

ஜெகம் அன்டு கோ., டாட்சன் அச்சாபீசில்

பதிப்பிக்கப்பெற்றன.

1926

உ

திருச்சிற்றம்பலம்.

திரிச்சிராப்பள்ளி, பிஷப் ஹீபர் காலேஜ் தலைமைத்
தமிழாசிரியர் திருவாளர்
**பண்டிதர், ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் இயற்றிய**

## சிறப்புப்பாயிரம்.

நிலவுல கத்தி னலகில்பல் லுயிரும்
மன்பதை யுடனே முன்பு தோன்றிய
தொன்மையு மனைத்து நன்மையுஞ் சான்ற
துங்க முறுந்தமிழ் மங்கலப் பாண்டியில்
அத்தனா ராண்டருள் முத்திற வடியரின்
பத்தி நலங்கனி வித்தகப் பாடல்சேர்
ஒருபதி னான்கு வருபதி யவற்றுள்
கண்ணுத லெம்மிறை காளை யுருக்கொடு
நண்ணிய கானப் பேரெனு நற்பதிச்
சார்புறு செல்வச் சீர்பெறு வெற்றியூர்
அன்னது தன்னி லுன்னிய வரந்தரும்
அன்னை பூரணி யன்னைசீ ரடிக்கே
ஒருபா வொருபஃ திருபா விருபஃது
முப்பாமுப் பஃது நாற்பாநாற் பஃது
மாலைத் தொடையும் வளஞ்சேர் போற்றிக்
கலிவெண் பாவுங் கவினிய கும்மியும்
அடிமடக் குடனும் அட்டப் பவந்தம்
எட்டுச் சித்தியு மட்டறு செல்வமும்
கல்வியு மன்புங் கவினிய வின்பமும்
படிப்போர் செவியின் மடுப்போ ரெவரும்
எய்துமா றாக மெய்திகழ் செஞ்சொலின்
நவையெலா மருகச் சுவையெலாம் பெருக
ஆக்கி யணிந்தன னாரெனிற் கேண்மோ
முற்புகல் பாண்டியிற் பொற்புமிக் காரும்
நற்புகழ்க் கல்வி நற்பதி யுடையோன்

தமிழ்க்கட லுண்டு சந்ததங் கவிமழை
இமைப்பினிற் பொழியு மெழிலி யானேன்
சைவந் தழைக்கத் தமிழ்மொழி யோங்க
வையம் பொலிவுற வைகலுங் கருதி
மெய்வளர் சிந்தை விளங்கிய பரிவினன்
நிலமிசை வந்து நீள்கழல் காட்டி
மலமறுத் தாண்ட வள்ளலை நினைந்தே
'என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனு மாறு கரையது புரள
நன்புல னொன்றி நாதவென் றரற்றி'ய
போதவூர் மேவும் வாதவூ ரண்ணல்
திருவடி மலர்கண் மருவுற வுளமும்
செவ்விய நாவும சென்னியு மளித்தோன
தாயினு மினிய சங்கரற் கன்ப
னுயவன் பணிபுரி தூய கடப்பா
டணிவா முருந்தவ னுகும
மணிவாசக சரணு லயன் மாதோ.

முற்றும்.

---

உ

சிவமபம்.

காரந்தைத் தமிழ்ச்சங்கத்து அமைச்சரும் 'தமிழ்ப்பொழில்'
பத்திராசிரியரும், தஞ்சை செயின்ட் பீட்டர் ஹைஸ்கூல்
தலைமைத் தமிழ்ப்பண்டிதரும் ஆகிய
திருவாளர்
ஆர். வேங்கடாசலம் பிள்ளை யவர்கள் இயற்றியவை.

## நேரிசை வெண்பா.

செந்தமிழும் மேலாம் சிவத்துறையுஞ் சீருறுமா
வந்து பிறந்தோன் வளரன்பும்—முந்துதமிழ்
நாட்டாரும் எண்ணுமோர் நற்புலமும் தன்போற்
கா' டி.: மணிவாச கன். (க)

அன்னான்றன் னன்னை அணிவெற்றி யூர்த்தேவி
தன்னா ரடியாந்தண் டாமரைக்கே—பொன்மாலை
வாய்ந்த மணமின்றி வாடும்பூ மாலையென
ஆய்ந்தணிநூன் மாலையணிந் தான். (உ)

மணிவா சகனருள்சேர் மாண்பன் உயர்வோர்க்கும்
தணியா வென்னுள்ளப்பே தாய்நீ—அணிதாற்கு
எட்டா நூன்மாலையினை எட்டுமா மாலையெனச்
சுட்டித் துணிந்திடலென்? சொல். (௩)

R. வேங்கடாசலம்.

---

உ
சிவமயம்.

லால்குடி போர்டு ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்
திருவாளர்
## வீ. குமாரவீரய்யர் அவர்கள்
இயற்றியவை.
### நேரிசை வெண்பா.

சீரணியும் வெற்றியூர்ச் செல்வி பணியன்ன
பூரணியும் பொற்றாட் புதுமலர்க்கே—யோரணிகொ
ளட்ட பிரபந்த மாக்கினான் றன்னைமுனந்
தொட்ட தொடக்கறுப்பான் சூழ்ந்து

ஆக்கினவ னாரென்னி னாக்கைநிலை யாய்ந்துபவம்
போக்கித் துறவுநெறிப் புக்குறையு—மீக்கொள்
மணிவா சகசர ணாலயப்பேர் வைகும்
மணிமா தவமுடையோன் மன்.

சுபம்.







உ

சிவமயம்.

ஸ்ரீ அன்னபூரணியம்மன்றுணை.

வெற்றிநகரம்

# ஸ்ரீ அன்னபூரணியம்மன்

# அட்டப்பிரபந்தம்.



முதலாவது

## கும்மிப் பாட்டு.

காப்பு—வெண்பா.

திருவுலவும் வெற்றித் திருநகர மாரு
மருவுலவும் பூங்குழனன் மங்கை—யுருவுலவுந்
தாயன்ன பூரணியின் சந்தக்கும் மிக்கருளுந்
தோயுமத யானைமுகத் தோன்.

பூவாரும் பொழில் வெற்றிநகர் தனிற்
பொருந்திவா ழன்ன பூரணியின்
பாவாருங் கழல் சூடுங் கும்மிதனைப்
பாடக் கணேச னருள் புரிவான்

மாவார் வெற்றிநக ரன்ன பூரணி
மாதாநற் கும்மிப் பாட்டுரைக்க
நாவா ரருந்துதி யீசன் சௌந்தர
நாயகி பாதங்க ளன்றொழுவேன்

ஆலமுண் டோனிட மேவிவள ரெம்மை
வாலைபரை யன்ன பூரணியின்
ஞாலம் புகழுங் கும்மியுரைக்க வெங்கள்
சால விநாயகன் றுணையே

காமர் நிறையும் பொன்வெற்றி நகர்வளர்
வாமியன்ன பூரணி கும்மிக்குச்
சோமேசர் காளீசர் சுந்தரேசர் தேவி
தாமேபரிந்து கிருபை செய்வார்

கொற்றஞ் செறிந்திடும் வெற்றிநகர் தனி
லுற்றுவள ரன்ன பூரணியின்
றற்றுங் கும்மிக்குத் தினமு மென்றன்மனம்
பற்று முருக னருள்புரிவான்

பேருடைய வெற்றி மாநகர் மேவுநல்
லேருடையா ளன்ன பூரணியின்
சீருடைய கும்மிப் பாட்டுரைக்கமரு
தாருடை யையனார் தாடுணையே

பூமகளி னணி வெற்றி நகர்மலை
மாமகளா மன்ன பூரணியென்
பாமகளின் கும்மிப் பாட்டுரைக்க வய
ளுமகள் பாதத்தை நான்றொழுவேன்

பொங்குந் திருவளர் வெற்றி நகருமை
மங்கை யன்ன பூரணிகும்மிக்கு
வெங்குரு வேந்தர் நாவுக்கர சாரூரர்
எங்கண்மணி வாசகர் துணையே

பூதலத்தி லேழை நாவுறுஞ் சொல்லினு
லோதலுற்ற தமி ழாராய்வோர்
தீதகற்றியன்னம் போலவே கொண்டுத
ராதலத்தி லென்று மாதரிப்பார் ௯

கும்மி யடியுங்கண் மங்கையரே நீங்கள்
கும்மி யடியுங்கண் மங்கையரே
அம்மை யுமையன்ன பூரணியைப் போற்றிச்
செம்மையாய்க் கும்மி யடிப்பீரே ௧௦

கொண்டையைச் சீவி முடியுங்கடி நல்ல
வண்டுலா மாலை யணியுங்கடி
கெண்டைவிழி யின்மை தீட்டுங்கடி வளர்
கொங்கையில் ரவிக்கை பூட்டுங்கடி ௧௧

சரிகைச் சேலையைக் கட்டுங்கடி நின்று
வரிசையாகக் கை கொட்டுங்கடி
விரியப் பல்லணி சூடுங்கடி தாள
மேள மிணங்கவே பாடுங்கடி ௧௨

காலிற் றண்டைசிலம் பேற்றுங்கடி நல்ல
கண்டசர மாலை நாற்றுங்கடி
பாலிற் கலந்த தேன் சர்க்கரை கற்கண்டின்
பாகினைப்போற் பாடிப் போற்றுங்கடி ௧௩

காதம்பரி மளம் வீசியுறும் நல்ல
கலவைச் சந்தனங் குங்குமமும்
சீதம்பர விடுங் கத்தூரி யுடன்
சேர்த்துப் பூசியே வாருங்கடி ௧௪

நெற்றியில் வட்டப் பொட்டிட்டு மினுக்கிட்டு
நீல விழியைப் பிறழவிட்டுச்
சுற்றி யழகாக வட்டமிட்டு நின்று
தூங்குமுன் றானையைத் தொங்கவிட்டு ௧௫

அரம்பை யூர்வசி மாதர்களும் வெட்கும்
அழகிற் சிறந்த மங்கையரே
வரம்பைக் கைக்கொண்டு காலொழுங் காகவே
வைத்துமே கும்மி யடியுங்கடி

மங்கையரே யன்ன பூரணியின் பெரு
மகிமைதன்னை யென் னுவதனுற்
சங்க்ரக மாகவே சொல்லுகிறே னதைத்
தாழ்ந்து கேட்டுப் பணியுங்கடி

கிட்ட நெருங்கியே வாருங்கடி கும்மி
கொட்டியே நிமிர்ந்து பாருங்கடி
அட்ட திக்கும்புக ழன்ன பூரணியாள்
கட்டழகி புகழ் கேளுங்கடி

வேத முடியி னடம்பிடுவா ளந்த
வேதத்தி னுட்பொரு ளாகிடுவாள்
நாத முடிவிற் றிகழ்ந்திடுவா ளந்த
நாதவடிவாய் நிறைந் திருப்பாள்

ஐந்தொழிற் காதார மாயிருப்பா ளதற்
கப்பாலுமாகி நிறைந் திருப்பாள்
விந்தைய தாகவே யண்டங்கள் யாவையும்
வேடிக்கை யாகப் படைத் திடுவாள்

ஓரெழுத்தாக விளங்கிடுவா ளதி
லொன்று மூன்றெழுத்து மாகிடுவாள்
பேரெழுத் தைந்தெழுத் தாகிடுவா ளதின்
பின்னுமே யாறெழுத் தாகிடுவாள்

ஐம்பத்தோ ரக்கர மாயிருப்பாண் மே
லகர வுயி ரெழுத் தாயிருப்பாள்
நம்பு மெட்டக்கர மாகிடுவா ளதி
ஞாணி ரூபம தாயிருப்பாள்

ஆதார மாறினு மேயிருப்பா ளதின்
மீது மேழாநிலை யாயிருப்பாள்
போதான வாயிரத் தெட்டிதழ்க் கமலம்
பொருந்து சோதிய தாயிருப்பாள் உரு

சந்திர மண்டல மாயிருப்பா ளதிற்
சாரு மமுத மயமாவாள்
கந்தர ரூபம தாயிருப்பா ளதின்
காட்சி பலப்பல வாகிடுவாள் உச

மூலப் பிரகிருதி யாவாள் செயன்
மூடுந் திரோதாயி யாயிருப்பாள்
சாலப் பெரியதோர் குண்டலி சத்தியாய்த்
தானே விளங்கி யமர்ந்திருப்பாள் உரு

தத்துவ முப்பத்தா றுகிடுவா ளதிற்
சாரு மறுபது மேலாவாள்
நித்திய மாகிய தத்துவா தீதமாய்
நிற்கும் பரம்பொரு ளாவாள் உசா

தெரியுஞ் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி
சேரு மவத்தை நிலையாவாள்
துரிய மாயுந் துலங்கிடுவாள் துரி
யாதீதப் பொருளு மாகிடுவாள் உஎ

முக்குண ரூபம தாயிருப்பாள் செக
முதன்மைச் சிற்சத்தி யாகிடுவாள்
நிற்குண ரூபமாய் நின்று வியாபக
நித்தியப் பொருள தாயிருப்பாள் உஅ

அட்ட சித்திகளு மாகிடுவா ளதற்
கதிட் டானமாக நின்றிடுவாள்
இட்ட சித்திமய மாயிருப்பா ளவ
ளெண்ணிய வெண்ணியாங் குய்த்திடுவாள் உகூ

சரியையாதி நாற்பாத மதி னின்றோர்
சாரும் பதமது நாலாவாள்
விரியு மந்திர மூலங்கள் யாவினு
மேவியே நின்று விளங்கிடுவாள் ௩0

தந்திர கோடிக ளாகிடுவா ளதிற்
சாரும் பரசிவை யாயிருப்பாள்
மந்திர கோடிக ளெத்தனையோ வதின்
மன்னு முயிர்நிலை யாகிடுவாள் ௩௧

முக்கோண சக்கரத் தாடிடுவாண் மேலு
மூவறு கோணத்தி லார்ந்திடுவாள்
எக்காலு நாற்பத்து முக்கோண சக்கரத்
தின்பமாய்த் தங்கி யிருந்திடுவாள் ௩௨

பூதவே தாளத்தி லேறிடுவா ளிந்தப்
பூதல மீதலஞ் சுற்றிடுவாள்
காதுமொரு சிம்ம வாகனத்தில் வந்து
காட்சி கொடுத்துச் சிறந்திடுவாள் ௩௩

சத்த கன்னியர்கள் சூழ வரியணை
தன்னிலிருந்தே யரசு செய்வாள்
நித்தமும் டாகினி சாகினிக் கணங்கள்
நேரிற் பணிசெய்யத் தான்வளர்வாள் ௩௪

ஆல விழிச்சி கனிமொழிச்சி செவி
யாருங் குழைச்சி யணியுழைச்சி
பால விழிச்சி பனிமொழிச்சி தேவர்
பாதம் பழிச்சித் தொழுமழுச்சி ௩௫

அன்பின் வலைச்சி யருள்வலைச்சி பரத்
தாருந் தலைச்சி கடல்வலைச்சி
யென்பணி சூடும் பெரும்புலைச்சி மலை
யேங்கிட வீங்கு மிருமுலைச்சி ௩௬

கோலஞ் சிறந்த பிடிநடைச்சி மிகக்
குலுங்கி வாடுந் துடியிடைச்சி
ஞால மளிக்குங் கருவுடைச்சி கையி
னுடிப் பிடிக்குஞ் சூலப்படைச்சி ௩௭

மதுரை வாணிச்சி குதிரை விற்றிட
வந்தவனின் சொந்தக் கண்காணிச்சி
சதுராய்த் தில்லையிற் கூத்தாடிச்சி காட்டிற்
றனே நடந்த வனவேடிச்சி ௩௮

இமய மாமலை நற்குறத்தி மிக
வெழில்சேர் வெள்ளி மலைக்குறத்தி
சமயத் தெய்வமாங் குமர வேடனைத்
தந்தெமைக் காத்த பெருங்குறத்தி ௩௯

கச்சிக் குறத்தி கனதனத்தி வில்லைக்
கையி லெடுத்து வருமறத்தி
இச்சித்துச் சொக்கரைத் தானே மணந்திட்ட
வெழிலைக் கொண்முத்த னப்பரத்தி ௪௦

பாண்டி நாடாளு மக ராசிமிகு
பாக்கியந் தந்த சுகவாசி
வேண்டுவோர் தங்கள் விசுவாசி மிக
விரும்பிப் போற்றுவோர் தந்நேசி ௪௧

இத்தகைச் சீருஞ் சிறப்புடையா ளம்மை
யிறைவியா மன்ன பூரணித்தாய்
நித்திய மாகத் திருக் கோயில்கொண்டு
நில வுலகத்தைக் காத்திடுவாள் ௪௨

அனந்த நூலுமறை யாலுஞ் சொல்லி
யளவிடுதற் கடங் காதாய்
வனந்திக ழன்ன பூரணித்தா யவள்
மகிமை சொல்ல வெனக்கெளிதோ ௪௩

இன்னல் வராமலே காத்திடுவா ளவ
ளின்பப் பெருவாழ் வளித்திடுவாள்
அன்னவள் பாதத்தைப் போற்றிப் பணிந்துமே
யழகாய்க் கும்மி யடியுங்கடி

வந்த பிறவி நலமளிப்பா ளினி
வரும்பிறவி வரா தளிப்பாள்
எந்த நலங்களுமே தருவா ளவ
ளேற்றிக் கும்மி யடியுங்கடி ௪௫

தாமக் கருங்குழன் மாதன்ன பூரணித்
தாயவ ளின்பமாய்க் கோயில்கொண்ட
சேம மிகுந்திடும் வெற்றிநகர் தனின்
சிறப்பைச் சொல்லுவேன் கேளுங்கடி ௪௬

ஒத்துக் குழுமிவ ளோந்துநின்று கையை
யுயரத்தூக்கி ச்சிரங் குனிந்து
முத்துக் குலாவும் நகை யரும்பமுக
மலர்ந்து கும்மி யடியுங்கடி ௪௭

சண்டா சுரனைக் கொன்றிடவே சிவ
சங்கரன் பாதம் பணிந்தேத்தி
அண்டர் வியக்கத் தவம்புரிந்தே வரு
மவுணன் றன்னைச் சமர்நாடி ௪௮

மங்கை யெழுவர்கள் தம்முடனே நின்று
மருவும் டாகினி சாகினியும்
பொங்கும் பலபடை சூழ்ந்திடவே யமர்
புரிந்து வீரமிகக் காட்டி ௪௯

கொற்றமிகுஞ் சண்டன் சுற்றமுடன் றலை
குவிந்து வீழ்ந்திடத் தான்வீட்டி
வெற்றி கொண்டதல மீததனு னல்ல
வெற்றி யூரென்று பெயருமிட்டாள் ௫௦

காணைத் தலத்திறை யைப்பணிந்தா னல்ல
காட்சி யளித்திடத் தானிருந்தாள்
ஏனைத் தலமுரு வாட்டிப்பனைசையு
மிருந்து கோயில்கொண்டே யமர்ந்தாள் ௫௧

பெரிய நாயகி கண்ணுடையா ளரன்
பிரிய நாயகி யெண்ணுடையாள்
அரிய நாயகி யன்னமளித்திங்கே
யன்னபூரணிப் பேர்கொண் டமர்ந்தாள் ௫௨

அன்னவளின் கடைக் கண்ணோக்கா லிந்த
வணிய வெற்றி நகர்நாளும்
பின்ன மில்லாமற் சிறந்தோங்கி வளம்
பெருகி பொங்குதல் பாருங்கடி ௫௩

மாட்சிமை தங்கிய குன்னங்கோட்டை நாட்டின்
மன்னர் வழித்திறந் தன்னையுமே
தாட்சி யில்லாமலே பேசுதற் கென்மதித்
தாமும் போதுமோ மங்கையரே ௫௪

மனத்துக் கெட்டாத காலந் தொடங்கியே
வாழ்ந்து வருகின்றா ரிந்நாட்டின்
இனத்துக்கொத்ததோர் கனத்தையும் பெருந்
தனத்தையும் பெற்றா ரின்பமுடன் ௫௫

வீரம் புகழ்பொறை நற்றவங் காருண்யம்
வெற்றியுங் கண்டுமுன் மன்னவர்கள்
வாரத்துடனே யளித்த விருது
வகைகள் பதினெட்டும் பெற்றுயர்ந்தார் ௫௬

உலகில் யாரையுமே பணியா ரொரு
காலத்திலுஞ் செயறுன் றணியார்
அலகில் மேன்மையுட னவரெந் நாளு
மமர்ந்து பூங்குடி வாழ்ந்திருப்பார் ௫௭

அன்னவ ராட்சி முறைபுரி நாட்டினி
லமர்ந்த தாகுமிவ் வெற்றிநகர்
தன்னை யெந்நாளுமே காத்தோம்ப விங்கே
யன்ன பூரணித்தாய் கோயில்கொண்டாள் ௫௮

சீரோங்கு மிந்த வெற்றி நகர்தனின்
சிறப்பை யுள்ளபடி தானும்
பாரோங்கித் திகழ்வோர்க ளறியவே
பகர்வேன் கேளுங்கண் மங்கையரே ௫௯

இந்த்ர குலத்தார் பெரும்பகுதி வளர்ந்
திலங்கும் வணிகரின் தொகுதி
சந்தோட மாக விருந்திறத் தவருந்
தம்முட் கலந்து வசித்திருப்பார். ௬0

மற்றும் பலவரு ணத்தாரு மிங்கே
வந்து குழுமி வசிப்பார்கள்
சுற்ற முறவுகிளை சுத ரோங்கியே
சுகமாய் வாழுவார் மங்கையரே ௬௧

முந்நீ ராடையு டுத்திடும் பூமகண்
முளரி வாழ்ந்திடு மாமகளுந்
தந்நீர் மையொடு பெரும்பொருட் செல்வந்
தன்னை யளித்திங்கே கோயில்கொள்வார் ௬௨

வறிய னுவன் வடதிசை மன்னவன்
வந்திந்த வெற்றிநகர் காணின்
சிறிய னுவன் வனப்பினின் மன்மதன்
தெரிந்து கொள்ளுங்கண் மங்கையரே ௬௩

மாட கூடங்கள் சிறந் தோங்கும் விண்ணின்
மாளிகை யேறி யுயர்ந்தோங்கும்
ஆட ரங்கங்கள் செறிந் தோங்குமிந்த
வணியைப் பாருங்கண் மங்கையரே ௬௪

வாசநீர்ச் சாலை யறச்சாலை பல
மன்னுங் கலைதேர் கலைச்சாலை
போசனச் சாலை வகையாவும் கண்டு
புகழ்ந்து கும்மி யடியுங்கடி ௬௫

பளிக்கு மேடை தென்றல்வாடை வரும்
பன்மல ரோடை நன்னீரோடை
களிக்குங் காடை யன்றிற்பேடை வளர்
காட்சியைப் பாருங்கண் மங்கையரே ௬௬

பாவையர் கையிற் பழகிமறைக் கிடை
பண்புடன் றங்கி யவைகேட்டுப்
பூவையுங் கிள்ளையும் பேசிக் குலாவிடும்
புகழைக் கேளுங்கண் மங்கையரே ௬௭

மூத்தவராங் கண்ணுற் பார்த்தவராந் துயர்
தீர்த்தவராம் நம்மைக் காத்தவராம்
மாத்தவர் பூசைசெய் சாலவி நாயகர்
மன்னுந் திருக்கோயில் பாருங்கடி ௬௮

வரத னம்மைத் தினங் காக்குமரு
தாருடை யையன் றிருக்கோயில்
இரத மேன்மைக் கரிபரிகள் செய்
திருக்கின்ற மேன்மையைப் பாருங்கடி ௬௯

கங்காள மணி கண்டன் றிருப்புயங்
கண்ணிய மாகத் தழுவியுறும்
அங்காள பர மேசுவரி கோயிலி
னழகைப் பாருங்கண் மங்கையரே ௭0

விண்டு துயின்றிடும் பாற்கடல் போலவே
விளங்கிச் சாலாட்சி தன்பேரைக்
கொண்டு விளங்குந் தடத்தின் பெருமையைக்
கூறிக் கும்மி யடியுங்கடி ௭௧

மாமகள் வாழும் மணைவளரும் கலை
நாமகள் பீடம நனிவளரும்
கோமகளா மன்ன பூரணித் தாயின்செங்
கோல்வளர் மேன்மையைப் பாருங்கடி

வேயிற் றலையிற் பிறந்தவர் கோயிலும்
விண்செலும் ஞாயிலும் நாற்புறத்தும்
வாயிலு மாயிலுங் கோபுரமுங் கொண்டு
மன்னுந் திருத்தளி பாருங்கடி ௭௩

ஆகமந் தேரு முயராதி சைவ
ரந்தணர் கூட்டங்கள் சேகரமாய்
மோகமுடன் கூடி வாழுந் திருவீதி
முன்னாற் கும்மி யடியுங்கடி ௭௪

பொங்கு மிளமரக்கா முது மரக்கா
பூமலர்க் காவும் பழக்காவும்
எங்கும் விளங்குஞ் சிறப்பினை நாவினா
லேத்திக் கும்மி யடியுங்கடி ௭௫

நானில நாற்றிணை யென்று புலவர்கள்
நவின்ற செய்யுள் வழக்காலே
மாநிலத்தி லுயர் வானது முல்லை
மருவிய மருத மென்பர்களால் ௭௬

அந்த முறைப்படி யிந்த வெற்றிநகர்
சந்த முறவே பலவளமும்
தந்து திகழ்வுறும் விந்தை மருதத்தின்
றன்மையைச் சொல்லுவேன் மங்கையரே ௭௭

விழவரும ணடைத்திடுவா ரெங்கும்
முழவரு மண் முழக்கிடுவார்
மழவரு மல்வளர்த் திடுவார் வய
லுழ வரும் லுழுதிடுவார் ௭௮

விஞ்சு பொழிற்றலே துஞ்சு கருமுகின்
மஞ்சு முழங்கி யழகாக
நன்செய் வளம்பல புன்செய் வளந்தர
நன்கு பொழிந்தே யுழவாக எகூ

தெய்வம் பராவிப் பறைமுழக்கி மள்ளர்
திகழு மருதப்பண் பாடிக்
கைவந்திடு மள்ளர் மங்கையர் குரவை
காட்டிக் கூத்துகள் தாளுடி அ0

மகபதிக்கு விழா வெடுத்தே தெய்வம்
வாழ்த்தியே மங்களங் கொண்டாடி
மிகமனது களிப்படைந்து மவர்
வெறி மதுவினைத் தானுகர்ந்து அக

வருங் களமர்பொன் னேரதனிற் பல
வன்ன வெருதுடன் மேதிகளும்
பெருங் களியோடு தான்புரட்டி யந்த
விருஞ்செறு வினைத்தா னுழுவார் அஉ

உழுது சேறுசெய் தின்பமுற்றே மனத்
தோகையுடன் செந்நெல் நாறுசெய்தே
தொழுது செவ்வி தனையறிந்தே யொரு
பழுது வராமற் காத்திடுவார் அந

பருவத்தி னுற்றைப் பறித்துமே மள்ளர்
மருவு மங்கையர் சிறித்துமே
கெருவத்துடனே குரவை பாடியே
கிளர்ந்து செய்யி னடுவார்கள் அச

கயல் புரண்டிடக் கண்விழுந்த தென்னக்
கையாற் றடவி மிகநாணி
மயல் சிறந்து நன்மது வருந்தியே
மள்ளரைப் பார்த்துச் சினந்திடுவார் அரு

வள்ளத்திற் கள்ளைக் குடிப்பார் கண்மாதர்
வரம்பி னின்று நடிப்பார்கள்
மள்ளர்க்கு மூற்றிக் கொடுப்பார்க ளவர்
வந்து தழுவத் தடுப்பார்கள் அரு

துகில் நழுவிடக் குழல் சரிந்திடத்
தோகை மயில் வெட்கத் தானடங்கே
பயிலு மள்ளர்கள் தோளைத் தழுவியே
பக்கத்தி னின்று களிப்பார்கள் அஎ

வெண்மை மறைந்து கருமை கொண்டுபயிர்
மிகப் பசந்து தழைத்திடவே
பெண்மை சிறந்திடு மள்ளரின் மங்கைய
ரண்மை யுறுங்களை தான்பறிப்பார் அஅ

முள்ளரைக் கமலஞ் செங்கழு நீர்வண்டு
மொய்த்திடு நீலங் குமுதமொடு
கள்ளொழு கும்பல மலரை யங்கையாற்
கண்டு பறித்தே யெறிந்திடுவார் அகூ

கண்ணு முகந்தனங் கரமிவை களின்
கா ணு முறவின மென்றுமன
மெண்ணுமற் பகை யென்று சினந்துமே
யெங்கு முலாவிப் பறித்திடுவார் கூ0

செந்நெல்கள் கன்னலை யொட்டி யுறுங்கன்னல்
சிறந்த வாழை கமுகை யொட்டும்
வன்னக் கமுகுகள் தென்னைதனை யொட்டி
வானத்த ளாவி வளர்ந்து நிற்கும் கூக

முப்புடைக் காய்தருஞ் செப்பமுறுந் தென்னை
கற்பகக் காவினை யொட்டியுறும்
இப்படி யாகச் சிறந்து வளர்ந்திங்
கிலகும் பெருமையைப் பாருங்கடி கூ உ

வாளைகள் தாவிப் பசுங்கமுகின் றலைப்
பாளைதனை யுடைத்தே சாயும்
பாளை வழிந்திழிந் தோடும் மதுவயல்
பாய்ந்து நிரம்பிப் பரிமளிக்கும் கடு

மந்தி பலவின் கனிவகிர்ந்து சுளை
தின்று பெண்குரங்கைத் தானூட்டிக்
குந்திச் சினைகள் தொறுந் தாவிக்கனி
கொள்ளை கொண்டுண்டு விளையாடும் சுச

மள்ளர்கள் கண்டு மிகச்சினந்து கையில்
வளை யெடுத்துக் குரங்கினத்தைத்
துள்ளி யெறியக் குரங்கிள நீர்தனைத்
தொட்டெறிந்து கரங் கொட்டிநிற்கும் கரு

மேக மிரங்கிப் பணையுலவ மள்ளர்
மேதிக ளென்றே கலப்பைதனின்
மோகமுடன் கட்ட மேகம் வெருவியே
முழங்கி வானிற் பொழிந்தேகும் கசு

புல்லருந்து மேதி நல்லமடி தன்னின்
மெல்ல வராலினம் முட்டிடவே
யொல்லையிற் கன்றெனக் கனிந் துருகியே
யூறிடும் பாலினைக் கொட்டிடவே கஎ

நீரிற் கலந்து நிறைந்திட வன்னங்கள்
நேசத்துடனே யணுகிநின்று
பாரினிற் றங்க ணிலைமை யறிந்திடப்
பாலைப் பிரித்துண்டு தானுலவும் கஅ

நீரோடை மலர்கள் சத்தி லோதிமம்
நேசப் பெடையைத் தழுவியுறும்
வாரேந்து முலை மள்ளர்கண் மங்கையர்
வன்ன நடைகண்டு நாணியுறும் கக

ஓகையுறு மள்ளர் மங்கையர் சாயலைத்
தோகைகள் கண்டு பறந்தோடும்
பாகையொத்த மொழியந் நல்லார் சொல்லினைப்
பார்த்துக் கிளிகுயில் வேர்த்தேகும் க00

ஞெண்டு சுருங்கை வழிபடைக்கு மதைக்
கண்டு மலங்கினந் தானடைக்கும்
வண்டு கமலமுகை யுடைக்கு மதைக்
கண்டு மங்கையர் கையாற்புடைக்கும் க0க

பொங்கும் பெருங்கடல் போலப் பணைகளிற்
சங்கு முழங்கியே தான்குமுறும்
அங்குறுஞ் சம்பினங் கண்டுவெ ருண்டோடி
யயற் புலத்திலே தானமரும் க0உ

சிச்சிலி யன்றில் சம்பங்கோழி கொக்குச்
சேருமாட் காட்டிமீன் கொத்தியுள்ளான்
இச்சையாய் நாகல வன்சிறு மீனினை
யிரையா யுண்டு குலாவியுறும் க0௩

பட்சி பறவைகள் படுக்கக் கண்ணிகள்
குச்சியி லொட்டுமே வைத்துமள்ளர்
பட்ச மில்லாமலே பார்த்திருப்பா ரதைப்
பார்த்துப் பறவைகள் தாமகலும் க0௪

சாம்பா நாரை கருநாரை வலி
சாரும் பவளக்கா ஞாரையுடன்
தேம்பாத பெருநாரை பலப்பல
சேருங் குருகுகள் தானமரும் க0௫

இட்டிடு முட்டை யெனநினைந்தே நாரை
யிட்டமுட னருகேயணைந்தே
கிட்டிப்பணி லந்தனை மருவ வளை
முட்ட வெருண்டு பறந்தேகும் க0௬

தாரா நீரின் மரக்கல மென்னவே
சீரா யோடி யுலாவியுறும்
நீரா னிறைந்த குட்டைகளி லெங்கும்
நீர்க்காக்கை மூங்கியே யெழும்பும் ௧0௭

மாமரத் தோடு மருதமரம் நல்
வருக்கைக் கனிசேர் பலாமரமும்
பூமரங்கள் பல சூழ்ந்து நெருங்கிடும
பொழில்கண் மேவிச் சிறந்தோங்கும் ௧0௮

விண்ணை யளாவிய சோலைத் தலைகளின்
மேவியே துஞ்சு முகின்முழக்கும்
பண்முழக்கும் நற் பறைமுழக்குஞ் சங்கின்
பரு முழக்கமு மாருதே ௧0௯

பங்கப்பழ னத்தியல் செவ்வி யறிந்து
பயிர் வளர்த்திடத் தான்வளர்ந்தே
தங்கும் பொதியுட் கருப்புறந் தோன்றியே
தானே செந்நெற் கதிர்விளையும் ௧௧0

கஞ்சத்தின் முத்துங் கரும்பின்முத்துஞ் செந்நெற்
கதிரின் முத்தும் பணிலமுத்தும்
விஞ்சித் திகழ்வுறுஞ் சிப்பிமுத்து மெங்கு
மேவிப் பரவு மொளிவீசும் ௧௧௧

வாழை யிருண்டு வளர்ந்தாடு மதின்
மன்னுங் கனிகள் கசிந்தோடும்
மாழைக் கமுகின் பழக்குலை பவள
மணித் திரளெனத் தானுடும் ௧௧௨

கன்னல்களெல்லாங் கழைக்கா டெனவே
கண்டங்கண் முற்றி முதிர்ந்திடவும்
பின்னமுற வெட்டிச் சாறடு மெந்திரம்
பெய்யு முழக்கத்தைப் பாருங்கடி ௧௧௩

கூனலிரும் பிணைக்கை வாங்கி மள்ளர்
குரவைபாடித் தெய்வம் போற்றிக்
கான விசையுடன் முன்களித்தே செந்நெற்
கதிரறுத் தவர்போர் வேய்ந்தே

இணையில்லாத வெழில் சிறந்த பல
வேறுகளும் பல மேதிகளும்
பிணையல் செய்தவர் போரடித்தே நெல்லைப்
பிரித்துத் தூற்றிக் களங்களிலே

செம்மணி வெண்மணிக் குன்றுக ளென்னவே
திரட்சியாகக் குவித்து வைத்தே
யம்மணி நம்மன்ன பூரணித் தாயவ
ளடிமலரினைத் தான் போற்றி

ஊர்க்காணித் தெய்வ முரிமைத் தெய்வங்க
ளொருங்கு கூப்பி யவர்க்களித்து
மார்க்கமுடன் றம தாண்டகை மார்களின்
மனையிற் பாண்டி லொடு சேர்த்தே

ஆண்டகை மார்கள் தருங்கூலி கொண்டே
யானந்த மாகவே சேரிபுக்கு
மாண்டகு மிக்க சிறப்பினொடு மள்ளர்
வாழும் பெருமிதம் பாருங்கடி

வறுமை யென்ப தறியாரே மக
மேருவைச் சேர்ந்திடுங் காகமெனச்
சிறுமை யின்றியே வாழ்ந்திருக்கு மவர்
செல்வத்தைப் பாருங்கண் மங்கையரே

ஓவிய ராலு மெழுதவொண்ணு வெழி
லுற்று விளங்கிடு மங்கையரே
பாவிய றன்னை யறியாதேன் சொல்லும்
பாவை யறிஞருங் கொள்ளுவரோ

திரு வளர்ந்திடும் வெற்றியூ ரதனைச்
சேரும் மருதச் சிறப்பினையே
வரு மொழியினுற் சிறி தறிந்திடும்
வண்ண முரைத்தே னறிவீரே கஉக

வெற்றி நகர்தனி லுற்றுச் சிறப்புடன்
மேவிவள ரிந்த்ரன் றன்குலத்தார்
மற்றும் பெரும்பொருட் கொற்ற வணிகரும்
மன்னும் பலவரு ணத்தவரும் கஉஉ

ஒருங்கு கூடிடு மன்ற மிதன்பெய
ருயர்ந்த கச்சேரி யென்றிடுவார்
வரும் பெருந்திரு நாளுநன் னுளிலும்
மங்களமா யிங்கே கூடிடுவார் கஉ௩

தேவிகௌரி யன்ன பூரணித்தாயின்
றிருக் கோயிலிதோ பாருங்கடி
மேவியே நாமு மடைந்தடி பணிந்து
வினையைப் போக்குவோம் வாருங்கடி கஉ௪

சந்நிதியில் வந்து சேர்ந்தோமே யிதே
நன் னிதியமெனத் தேர்ந்தோமே
முன்னிய வரங்கள் பெற்றோமே வந்து
மொய்க்குங் கவலைக ளற்றோமே கஉ௫

மங்கையரே யம்மை சந்நிதியி னின்று
மங்களப் பாவினந் தான்பாடி
சிங்கார மாகவே கூடிநின்றே யுங்கள்
செங்கையாற் கும்மி யடியுங்கடி கஉ௬

பத்தியுடனே மது வெடுப்பார் வெகு
பண்புடனே முளை தானெடுப்பார்
சித்திரையிற் றிருத் தேருடனே பெருந்
திருவிழாவும் நடத் திடுவார் கஉ௭

பூசனை செய்தல் வெகுநேர்த்தி தினம்
பொருந்தி யம்மை யடிச்சீர்த்தி
வாசனை யாகவே பாடி யனைவரும்
வணங்கிச் சேர்வர் பெருங் கீர்த்தி கஉஅ

அம்மை கொலுவினைப் பாருங்கடி யவ
ளழகை நாவினுற் கூறுங்கடி
செம்மை யாகவடி சேருங்கடி சென்று
சீர்பெறக் கும்மி யடியுங்கடி கஉகூ

சோதி வனமிதன் பேராகு மிதைச்
சொல்லிப் புகழ்வா ராலாகும்
பாதி மதியணி வேணிய னெம்மிறை
பரமன்கா ளீச னூராகும் கநூ0

கானப்பேர் காளையார் கோவிலுக் கிரண்டு
காவதம் வரையுஞ் சுற்றியுள்ள
தானத்தினை யெல்லாங் கானப் பேரெனவே
சாற்றும் புராணத்தைப் பாருங்கடி கநூக

பரமன் காளீசன் பாகம் பிரிந்தருட்
பண்பினுற் காளி யெனவமர்ந்தே
வரமுந் தந்து நமைக்காக்க வெங்கு
மன்னிப் பலகோயில் கொண்டிருந்தாள் கநூஉ

மேலைப் பனைசையுங் கீழைப் பனைசையும்
விளங்கும் பாக னேரிதானும்
சாலப் பழஞ்சிறு வாபுரியு முயர்
தன்மை மிகுந்த கல்விநகரும் கநூநூ

ஆங்குடிகள் வளர் பூங்குடியுமதற்
கடுத்தமாள கண்டரான் முனும்
பாங்குறு மிந்த வெற்றிப்பதியு முரு
வாட்டிப் பதியும் பலபதியும் கநூச

பற்பல வாடல் புரிந்து வேறாகவே
பண்புறு நாமங்கள் கொண்டமர்ந்த
சிற்பரையா மன்ன பூரணித் தாயவள்
சிறந்த பாதத்தைப் போற்றுங்கடி ௧௫௫

காளி யெனும்பெயர் கொண் டிலங்கித்
தேவர் கலங்க வாட்டித் துயர்புரிந்த
மீளி யெனுஞ் சண்டா சூரனைத் தடிந்து
வெற்றி கொண்டாளிந்த வெற்றிநகர் ௧௫௬

அன்பொடு தன்படை யுண்ணக் கனிவுட
னன்ன மளித்திட்ட தன்மையினால்
இன்பமுட னன்ன பூரணிப் பெயர்கொண்
டேற்ற முடனே கொலு விருப்பாள் ௧௫௭

தேவரிடுக்கண் டனைப் போக்கிப் பின்பு
செய்யசுவர்ண வல்லிப் பெயராள்
மூவ ரறியாத விறைகா ளீசனை
மோக முடனே மணம்புரிந்தாள் ௧௫௮

அன்னவ ளின்றிரு விளை யாடறனை
யாரா லறிந்து சொலக்கூடும்
மன்னாதி சேடற்கு மாகாதே யுயர்
மறைகளா லு முடியாதே ௧௫௯

கோவி லழகினைப் பாருங்கடி யென்றன்
கூடவே நீங்களும் வாருங்கடி
மேவியே வேண்டும் வரங்களெல்லா மிங்கே
விரைந்து போற்றியே கேளுங்கடி ௧௬0

நாடு தழைக்க நகர்தழைக்க விந்த
நானில மெல்லாமுந் தான்றழைக்கப்
பீடுறு சைவ சமயந் தழைத்திடப்
பெரிய வரத்தைக் கேளுங்கடி ௧௬௧

சிங்க முழங்கு முழக்கத்தைப் போலவே
சிறுமகார்கள் கலைதேருஞ்
சங்க முழங்கத் தமிழ் முழங்கிடவே
தக்க வரந்தனைக் கேளுங்கடி ௧௪௨

சமயா சாரிய ரருளிச் செய்திட்ட
தமிழ் மறையின் றிருமுறையும்
அமையும் பன்னிரு முறையு மோங்கிட
வணிய வரத்தைக் கேளுங்கடி ௧௪௩

சைவ சித்தாந்த துறையை விளக்கிடுஞ்
சாத்திரங்க ளெல்லாம் பேதமின்றி
யுய்ய வுலகின ரியாவருங் கற்றிட
வுரிய வரந்தனைக் கேளுங்கடி ௧௪௪

மறுமொழித் துறை புகுந் துழன்றிடு
மக்க ளறிவுகடான் றிரும்பித்
திற னளித்திடுந் தமி ழுணர்ந்திடச்
செய்ய வரத்தினைக் கேளுங்கடி ௧௪௫

பத்தி பெருகியே பரமன் பாதங்க
ணத்தியே யாவருந் தானுணரச்
சித்தி தரும்படி யம்மையின் சேவடி
சேவித்து வரத்தைக் கேளுங்கடி ௧௪௬

பொய்யொழிந் தோடவு மெய்சிறந் தேறவும்
பூதலத் தேவரு மின்புறவும்
கைவரும்படிக் கெம் மன்னையைப் போற்றியே
கரைந்து வரத்தைக் கேளுங்கடி ௧௪௭

கொல்லா விரத மெல்லாருங் கொண்டு
நல்லாரா யம்மை பாதந்தனைச்
சொல்லாற் றினமுந் துதித் தடைந்திடத்
தூய வரத்தினைக் கேளுங்கடி ௧௪௮

மங்கையரே நீவிர் கேட்ட வரமெல்லா
மங்கள மாகவே தானளித்தாள்
துங்க முறும்பதந் தொழு தவளிடந்
தங்கும் விடைகொண்டு வாருங்கடி கசஅ

பெற்ற முறும்பர மேச னுமைகுகன்
கொற்றக் கரிமுகன் றன்வாழி
கொற்றநன் மாதன்ன பூரணித் தாயவள்
குளிரும் பாதத் தளிவாழி கருo

நானிலம் வானில முகிலின மதி
ரவி யினங்களுந் தான்வாழி
மாநில மன்னர் குழுவாழி தமிழ்
வளருஞ் சைவமுந் தான்வாழி கருக

சீர் பெறும் வெற்றி நகர்வாழி யதிற்
சேர்ந்து வசிப்பவர் தான்வாழி
ஏர்பெறும் மித்ர குலத்தவர் வணிக
ரின்பமுற் றெந்நாளும் வாழியவே கருஉ

(ஆகப் பாட்டு கருஉ.)

முற்றும்.

---

உ

சிவமயம்.

ஸ்ரீ அன்னபூரணியம்பாள் துணை.

இரண்டாவது

மாலை.

காப்பு—வெண்பா.

ஆலைக் கரும்ப னமர்ந்திலங்கும் வெற்றிநகர்
மாலைக் கரும்பன்ன பூரணிமான்—மாலையொரு
நூறுந் தழைக்கநல நுண்சொற் பொருளளிக்கும்
நாறுமத வும்பலிந்த நாள்.

## நூல்.

எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

பங்கய முறுவோன் கரத்திலு மாதர்
படுமயற் கிணற்றிலுங் கொடிய
செங்கணார் வன்கட் பகட்டுறு நமனார்
சினத்திலு முழன்றுவா டுவேனை
வெங்குரு வேந்த ரழுதிடத் தனத்தின்
விழுமிய வமுதினைக் கறந்து
பொங்குறு ஞானங் கலந்தினி தளித்த
புவனையே யன்னபூ ரணியே.

பரவிடு முந்நீர்த் திரையென வணுகும்
பவந்தொறுந் தொறும்படிந் துழன்று
விரவிடு நசையான் முப்பொருள் வேட்டு
வீணிலே யுழன்றுவா டுவேனை
கரவட முடைய சமண்மதம் வெறுத்துக்
கருதுநா வரசினை யாண்ட
சிரவட மிலகும் பரமனைப் புணருந்
தேவியே யன்னபூ ரணியே.

பாரினில் வலிய பெருஞ்சுழல் வளியிற்
படுந்துரும் பெனப் பவத்தணுகிச்
சீரிய தவத்தைக் கருதிடா தின்னஞ்
சிறுமதி கொண்டுவா டுவேனை
பேரினிற் சிறந்த நம்பியா ரூரர்
பிணிப்புறும் பரவைபாற் றூது
நாரினி னடந்த பரமனார்க் கினித்த
நாயகி யன்னபூ ரணியே.

பாண்டிலின் சகடக் காலென வணுகும்
பவந்தனிற் சிக்கியே யுழன்று
வேண்டுத லெனுமோர் முதலைவாய்ப் பட்டு
வீணிலே யுழன்றுவா டுவேனை

பாண்டியன் றனக்கு மந்திரி யாரைப்
பரவுமா ணிக்கவா சகரை
யாண்டருள் சுரந்த விறைவனூர்க் கினிய
வமுதமே யன்னபூ ரணியே.
நித்திரை விழிப்புச் செயலென வணுகும்
நினைக்கரும் பவத்திடை யணுகி
யித்தரை யதனி லோபமோ கத்தி
னிடர்க்கடல் விழுந்துவா டுவனோ
முத்தமிழ்க் கடலா மெய்கண்ட சிவத்தை
மோகமா யாண்டருள் புரிந்த
வித்தகக் கருணை யிறையவர்க் கினித்த
விமலையே யன்னபூ ரணியே. ரு
வெளிமிகு முள்ளிற் சரிக்குமூச் சென்ன
விரவிடும் பவத்தினி லணுகிக்
களிமிகு செருக்காங் காற்றினிற் பட்டுக்
கலங்கியே யுழன்றுவா டுவனோ
வளிமிகு மெமதோ ரருணந்தி சிவத்தை
யருளினாற் புரந்தினி தாண்ட
வொளிமிகுஞ் சடையார்க் கினிமையை யளிக்கு
முத்தமி யன்னபூ ரணியே
வந்திடு மிரவும் பகலென வணுகி
வந்திடும் பவந்தனி லணுகி
யுந்திடும் புலன்க ளெனும்பகை யதனா
லுளமது கலங்கிவா டுவனோ
தந்திடும் பவத்தை விடுமறை ஞான
சம்பந்த சிவத்தினை யாண்ட
கொந்திடுங் கொன்றைச் சடையனூர்க் கினித்த
குமரியே யன்னபூ ரணியே
வித்தினின் முளைத்துப் பழுத்திடுஞ் செயல்போல்
விரிந்திடும் பவத்தினி லணுகி
யித்தலத் தந்தக் கரணமாம் விலங்கா
லிடர்க்கடல் விழுந்துவா டுவனோ

சுத்தமெய்ஞ் ஞான வுமாபதி சிவத்தைச்
சுகமளித் தினிமையா யாண்ட
வத்தனு மெங்க ளிறையவர்க் கினிமை
யளித்திடும் மன்னபூ ரணியே
நினைப்பெனு மூலந் தனிலிருந் தெழுந்தே
நிவந்திடும் பவத்தினி லணுகி
யெனைப்பெரி தலைக்குஞ் சினப்பெரும் புலியா
லினைந்துமே நொந்துவா டுவனோ
மனைப்பெரு வாழ்க்கைத் தில்லையின் மறையோர்
மகந்தனை யுவந்தருள் புரிந்த
கனைப்பெழுங் கங்கைச் சடையிறை களித்த
காட்சியே யன்னபூ ரணியே
இருவினைப் பயிராற் கொழுந்துவிட் டெழுந்தே
யிடர்செயும் பவத்திடை யணுகிக்
கருவினிற் புகுத்தும் பெருமய லதனிற்
கலங்கியே யுழன்றுவா டுவனோ
வருதிரு நீல கண்டர்க்கு மனைக்கும்
மகிழ்வுறு மிளமையை யளித்துத்
திருவடி சேர்த்த பரமனைத் தழுவுந்
தேவியே யன்னபூ ரணியே
மதுவிழி குழலார் விழிவலை யதனின்
மானென வணுகியே மருண்டு
பொதுவியர் கரத்தின் மத்துறு தயிராய்ப்
புலம்பியே யுழன்றுவா டுவனோ
வதுவைசெய் மனையைத் தருமியற் பகையை
மனங்களித் தினிமையா யாண்ட
விதுவணி சடையெம் மிறைவனைத் தழுவும்
விமலையே யன்னபூ ரணியே
பண்ணினிற் சிறந்த மொழியயின் மடவார்
படுமயற் கண்ணியி லணுகி
மண்ணினிற் பிறந்த மனித்தரிற் பதராய்
வாடியே யுழன்று வாடுவனோ

வெண்ணினிற் சிறந்த விளைசைநன் மாறர்க்
    கினிமையாந் திருவடி யளித்த
கண்ணினிற் சிறந்த வெமதிறை களிக்குங்
    கண்ணியே யன்னபூ ரணியே கஉ

வட்டமா மதியந் தனைநிகர் முகத்தார்
    மஞ்சளின் மினுக்கினின் மயங்கித்
துட்டமா மதனன் கணையது துளைக்கத்
    துன்பினி லுழன்றுவா டுவனோ
சிட்டராம் பெரிய மெய்ப்பொரு ளடியார்
    சிறப்புறத் திருவடி யளித்த
நட்டரா மெமது பரமனுர்க் கினித்த
    நாயகி யன்னபூ ரணியே கங

செழுந்துவ ரிதழார் விழிவலை யதனுற்
    றிண்கரி கொப்பத்திற் சருவி
விழுந்தவா விழுந்து மதிசிதைந் தடியேன்
    வீணிலே யுழன்றுவா டுவனோ
வழுந்திடும் பத்தி விறன்மிண்டர் தம்மை
    யன்புடன் காத்தருள் புரிந்த
கொழுந்தெனும் பிறைசேர் சடையெம திறைபாற்
    குலவிடு மன்னபூ ரணியே கச

வடுவயில் கரிய வண்டுவா ளம்பு
    தனைநிகர் மடநலார் விழியின்
கொடுவிட மேறிக் காம வேதனையாற்
    குலைந்துநா னுழன்றுவா டுவனோ
படுபுக ழமர் நீதியைமிகக் கனிந்து
    பண்புறப் பரிந்துகாத் தளித்த
கடுவொளிர் மிடற்றெம் மிறைவரைத் தழுவுங்
    காதலி யன்னபூ ரணியே கரு

முல்லையி னரும்பு *முத்தெனு மெயிற்றார்
    மூரலிற் சிக்கியே யுழன்று
வல்லினும் பகலு மவரடி பணிந்தே
    யறிவது மெலிந்து வாடுவனோ

மல்லினிற் சிறந்த தோளெறி பத்தர்
வளம்பெறத் திருவடி யளித்த
வெல்லொளி முடியா ரெமதிறைக் கினித்த
விறைவியே யன்னபூ ரணியே ௧௬
பங்கய நிகர்த்த முகமினா ரிதழைப்
பருகியே விடந் தலைக்கேறிப்
பொங்குறு காமச் சலதியில் விழுந்து
புணையின்றி யுழன்றுவா டுவேனோ
மங்களம் பொலி யேனாதியா நாதர்
மருவிடத் திருவடி யளித்த
திங்களஞ் சடையா ரெமதிறைக் கினித்த
தேவியே யன்னபூ ரணியே ௧௭
கூற்றுவன் பாச மெனுங்கொழுங் காத்தாற்
குலவியே யிறுகிடத் தழுவிச்
சேற்றினி லழுத்தும் பரத்தையர் மயலிற்
சிக்கியே யுழன்றுவா டுவேனோ
வாற்றலிற் சிறந்த திண்ணனார் கண்ணை
யப்பிட வருள்சுரந் தாண்ட
நீற்றெழின் மேனி யெமதிறைக் கினித்த
நேசியே யன்னபூ ரணியே ௧௮
பருமத்த யானைக் கொம்பெனப் பாய்ந்து
பட்டு நெஞ்சுருவியே மயக்கந்
தருமுத்த வடஞ்சேர் முலைமினார் மயலிற்
றங்கியே யுழன்று வாடுவேனோ
தருமத்திற் சிறந்த கலயனார் தம்மைத்
தண்ணளி யாற்கனிந் தாண்ட
சருமத்தை யணியுஞ் சங்கரற் கினித்த
தையலே யன்னபூ ரணியே ௧௯
கன்மலை யெனவு நெஞ்சினிற் பாய்ந்து
கலக்கியே யறிவினைச் சிதைத்த
பொன்மலை யென்னு மடநல்லார் வளர்த்த
புணர்முலைக் கழுங்கி வாடுவேனோ

மன்மலை மலிந்த தோள் வள்ளலாய
மானக் கஞ்சாறரைக் காத்த
பொன்மலை வில்லி யெம்மிறைக் கினித்த
புவனையே யன்னபூ ரணியே உ0
பங்கெனத் திரண்டு பணைத்திறு மாந்து
படந்தனைப் போர்த் தெங்குமணக்குஞ்
சந்தனக் கலவை யணிந்திடு முலையார்
தடமய லழுந்திவா டுவனே
வந்தனைத் தரிவாட் டாயரைத் தமது
மலரடி சேர்த்தருள் புரிந்த
விந்தனச் சுவையா ரெமதிறைக் கினித்த
விறைவியே யன்னபூ ரணியே. உக
செண்டினைப் பழித்து வல்லினைச் சினந்து
செவ்விள நீரினைக் கனன்ற
கண்டினைப் பழித்த மொழிநல்லார் வளர்த்த
கனதனத் தினைந்துவா டுவனே
வண்டினைப் பழித்த விழியர்வாழ் மங்கை
மன்னுமா னாயரைக் காத்த
தெண்டிரைக் கங்கைச் சடையருக் கினித்த
தேவியே யன்னபூ ரணியே உஉ
கொம்மைசேர்ந் துபர்ந்து குவிந்திடு முலையைக்
குலுக்கியே விலையது பகருஞ்
செம்மைசேர்ந் தறியாப் பரத்தையர் மயலிற்
சிக்கியே யுழன்றுவா டுவனே
மும்மையா லுலகாண் டெழிலொடு சிறந்த
மூர்த்தியார்க் கருள்புரிந் தாண்ட
வம்மையோ டப்பர்க் கினிமையை யளிக்கு
மம்மையே யன்னபூ ரணியே உ௩
செந்திரு நிகர்த்த மடநல்லார் தமது
செழுந்துடை வாழையிற் சார்ந்து
நந்திடு மரவங் கடித்திட வதனா
னாளுமே யுழன்றுவா டுவனே

வந்திடு முருக னார்தமக் கிரங்கி
மலரடி யளித்தருள் சுரந்த
சந்திர மௌலி யெமதிறைக் கினித்த
தலைவியே யன்னபூ ரணியே உ௪
கடித்திடின் மீளாக் கடிதட வரவங்
கடித்திட விடுத்தெனை மயக்கி
நடித்திடு மின்னார் மயலினிற் படிந்து
நானுமே யுழன்றுவா டுவனோ
படித்திடு முருத்ர பசுபதி யடியார்
பண்புறக் காத்தருள் புரிந்த
வடித்திடும் வழுதிக் கருளுமெம் மிறைவர்க்
காவியே யன்னபூ ரணியே உரு
கண்ணுதற் பரனை யிகழ்ந்தவர் நரகக்
கரைதனி லேறினு மேறாப்
புண்ணெனு மாதர் கடிதட நரகிற்
புகுந்துநா னுழன்றுவா டுவனோ
வெண்ணினிற் சிவந்தேர் திருநாளைப் போவார்க்
கினிமையாந் திருவடி யளித்த
தண்ணளிக் கடலா மெமதிறை தழுவுந்
தையலே யன்னபூ ரணியே. உசு
கும்பிபா கம்மென் பெருநர கினிமேற்
குவலயத் திலையிலை யிதுவே
நம்பலா மென்னுங் கணிகைய ரல்கு
னரகினில் விழுந்துவா டுவனோ
தம்பிராற் கினித்த வுயர்திருக் குறிப்புத்
தொண்டரைத் தமதடி சேர்த்த
வெம்பிராற் கினித்த மங்கையே யவனிக்
கிறைவியே யன்னபூ ரணியே உஎ
மலையினி லாடு மஞ்சுபோற் றோன்றி
மறைந்திடும் யாக்கையை மனத்தி
னிலையென நினைந்து கடவநாட் கழித்து
நிலையின்றி யுழன்றுவா டுவனோ

தலையினை யுணர்ந்து தாதையைத் தடிந்த
சண்டியார்க் கிரும்பத மளித்த
வலையினை யுடைய சடையெம திறையை
யணைந்திடு மன்னபூ ரணியே உஅ
இந்திர சாலங் கானலி னீரென்
றிமைப்பொழு தினின்மறைந் தொழியு
மந்தர மினலா மாக்கையை நிலையென்
றடியனு முழன்றுவா டுவனோ
செந்திருப் பாண்டி மந்திரி யாய
செழுங்குலச் சிறைதனைக் காத்த
சுந்தர ரூப னாகிய விறையின்
றோள்புண ரன்னபூ ரணியே உ௯
பாரினிற் பொழியு மழையுறுங் குமிழிப்
பண்பெனத் தோன்றியே மறையும்
நீரினை யுடைய யாக்கையை யடியேன்
நிலையென நம்பிவா டுவேனோ
சீரியன் மிழலைக் குறும்பருக் கினிய
திருவடி யளித்தினி தாண்ட
பேரியற் கருணைப் பரமனைத் தழுவும்
பெற்றிசே ரன்னபூ ரணியே ௩0
கனவினின் மெய்யாய்த் தோன்றிடு முலகங்
கண்விழித் திடமறைந் திடல்போல்
நனவினிற் றோன்றி மறையுமிவ் வுடலை
நம்பியே நானும்வா டுவனோ
வினவிருள் சீக்குஞ் சோதியாம் பேயார்க்
கிரும்பத மளித்தினி தாண்ட
மனவணி பூண்ட வேடனைத் தழுவு
மங்கையே யன்னபூ ரணியே ௩௧
இரவினிற் கூத்த னரசனாய் நடிக்கு
மியல்பினைப் பொருந்திய யாக்கை
விரைவினி லழியுந் தன்மைய வாயும்
விரைந்திடா துழன்று வாடுவனோ

தரையினிற் பெரிய நம்பியப் பூதி
நாயனார் தமக்கருள் சுரந்த
வரவணி சடையான் றனைத்தினந் தழுவு
மம்மையே யன்னபூ ரணியே
மோதிடும் வளியின் முற்றிய கனிபோய்
மொய்த்திடுங்கா யுதிர்ந்திடல் போற்
றீதுறும் யாக்கை நிலையறி யாது
திகைத்துநா னம்பிவா டுவனே
பேதம தறியா நீலநக் கரைத்தம்
பெருந்திரு வடிகொடுத் தாண்ட
சீதமா மதிசேர் சடையிறைக் கினித்த
தேவியே யன்னபூ ரணியே
நேற்றிரா விருந்தா ரின்றிலை யெனுமோர்
நிலைமையா யுலவிடும் யாக்கை
யாற்றலை யறியா தடியனு நிலையென்
றனுதின முழன்றுவா டுவனே
தோற்றிய பெருமை நமிநந்தி யடியார்
சுகம்பெறத் திருவடி யளித்த
மாற்றிரு நீற்றெம் பரமனைப் புணரும்
பாவையே யன்னபூ ரணியே
சண்டனுக் கிலக்காய் வளர்ந்திடுங் கொடிய
தன்மைசேர் யாக்கையி னிலைமை
கண்டுகொண் டொழுகா தினிமையா யடியேன்
கருதியே யுழன்றுவா டுவனே
தொண்டரா மேயர் கோன்கலிக் காமர்
சுந்தரர்க் கினியரை யாண்ட
வண்டர் நாயகனை யெமதிறைக் கினித்த
வமுதமே யன்னபூ ரணியே
அருத்திடு முணவு வாயிலுங் கையிலு
மாகிடுந் தருணத்தி லழியும்
பெருத்திடும் யாக்கை நிலையறி யாது
பேதைநா னுழன்றுவா டுவனே

திருத்தம தான மந்திர மளித்த
திருமூலர் தமக்கருள் சுரந்த
வொருத்தரா மெமது பரமரைத் தழுவு
முத்தமி யன்னபூ ரணியே ௩௬
மறித்திடிற் கணமும் வைத்திட வொண்ணு
வருமுடை நாற்றத்தை யளித்தே
வெறித்திடச் செய்யும் யாக்கையை நம்பி
வீணிலே யுழன்றுவா டுவனோ
குறித்திடு நாட்ட மிகுதண்டி யாரைக்
குணமொடு காத்தருள் சுரந்த
மறித்துடிக் கரத்தெம் வள்ளலைத் தழுவு
மங்கையே யன்னபூ ரணியே. ௩௭
நாய்நரி கழுகு காக்கைகள் விரும்பி
நாளெதிர் பார்க்கும் யாக்கையினை
யாய்தரச் சிறிது மதியின்றி நிலையென்
றணுகியே யுழன்றுவா டுவனோ
காய்சினம் வெறுத்த மூர்க்கரை யணைத்துக்
கழறனி லினிமையா யாண்ட
வேய்தனின் முளைத்த வெமதிறைக் கினித்த
விமலையே யன்னபூ ரணியே ௩௮
வினைச்சரக் கேற்று மரக்கல மெனவே
வியன்புவி தனில்வளர்ந் துலவி
யெனைச்சரக் காக்கும் யாக்கையி னிலைமை
யெண்ணிடா துழன்றுவா டுவனோ
முனைச்சது ரறியப் பரமனை யழைத்த
முத்தராஞ் சோமாசி மாறர்
தனைச்சது ராக்கு மெமதிறை தழுவுந்
தையலே யன்னபூ ரணியே ௩௯
மலத்தொடு புழுவும் நிறைந்திடும் யாக்கை
வகையினை யுணர்த்திடா தவைதாம்
நிலைத்தன வெனவே சதமென்று களித்து
நித்தமு முழன்றுவா டுவனோ

வலைத்தலை யதனி லருமையாய்க் கல்லா
　　லடித்திடுஞ் சாக்கியற் காத்த
சிலைத்தழும் புடைய வெமதிறைக் கினித்த
　　தேவியே யன்னபூ ரணியே ௪௦
நரம்பொடு தசையு மெலும்பொடு தோலும்
　　நனிதொடுத் திட்ட யாக்கையதின்
வரம்பினை யறியா திரும்பென மதித்து
　　மண்ணிலே மயங்கிவா டுவனோ
வரம்பெறு மெழிலார் சிறப்புலி யடியார்
　　வாழ்ந்திடத் திருவடி யளித்த
சிரம்பொலி மாலை யணியெம திறையைச்
　　சேர்ந்திடு மன்னபூ ரணியே ௪௧
ஒன்பது வாயி லோட்டைமட் கலம்போ
　　லுயர்தவர் வெறுத்திடும் யாக்கை
யென்பதை யுணரா தின்பமுற் றடியே
　　னின்னமு முழன்றுவா டுவனோ
வன்பிறற் சேயை யறுத்துண வாக
　　வரற்களித் திடுசிறுத் தொண்டர்
தன்பத மடைய வருள்செயு மிறையைத்
　　தழுவிடு மன்னபூ ரணியே. ௪௨
தன்னையே மதித்துத் தருக்கொடு செருக்குந்
　　தகைமைசா ரிளமையைப் பெரிதென்
றுன்னியே மாதர் போகத்தை விரும்பி
　　யுவர்ப்பின்றி யுழன்றுவா டுவனோ
மன்னனாய் வாழ்ந்த சேரமான் பெருமா
　　ளையனார்க் கருமையாங் கைலை
தன்னையே யளித்த வெமதிறை தழுவுந்
　　தையலே யன்னபூ ரணியே ௪௩
ஆடையை யணியை யழகுறப் புனைந்தே
　　யாடவர் தமிற்சிறந் தேமென்
றேடவிழ் மாலை தனைமுடித் துலவு
　　மிளமையை நம்பிவா டுவனோ

நாடரும் பெருமைக் கணநாத னாரை
நலமுறத் திருவடி யளித்த
தோடணிந் திலகு மெமதிறைக் கினித்த
துணைவியே யன்னபூ ரணியே ௪௪

சந்தனம் புழுகு தமையணிந் தழகாய்த்
தையலார் மருங்கினி லுலவித்
தந்தனம் பாடு மிளமையை விரும்பித்
தரணியி லுழன்றுவா டுவனோ
வந்தனஞ் சிறந்த களந்தைக்கூற் றுவர்க்கு
மலரடி யளித்தினி தாண்ட
பந்தனஞ் சிறந்த சடையெம திறையைப்
பரவிடு மன்னபூ ரணியே ௪௫

தந்தையர் தாயர் குரவர்தம் முறவோர்
தமர்களின் சொலையவ மதித்து
விந்தைசெய் நடனைப் போற்செயு மிளமை
விரும்பியே யுழன்றுவா டுவனோ
வந்தபொய் யடிமை யிலாதநற் புலவர்
வாழ்ந்திடத் திருவடி யளித்த
வெந்தையாம் பரமர் தமைத்தினந் தழுவு
மிறைவியே யன்னபூ ரணியே ௪௬

பட்டழ கினையும் பணியழ கினையும்
பரந்ததோர் நுதறனி லிலங்கும்
பொட்டழ கினையும் விரும்பிடு மிளமை
புகுந்துநா னுழன்றுவா டுவனோ
மட்டொழு கிடும்பூ மாலைசேர் முடியார்
மன்புகழ்ச் சோழரைக் காத்த
கட்டழ கொளிருஞ் சடையெம திறைவர்
காதலி யன்னபூ ரணியே ௪௭

மங்கையர் நயன வரியளி மொய்க்கு
மலர்முகந் திகழ்வுற வவரைத்
தங்கையாற் றழுவு மிளமையை விரும்பித்
தரணியி லுழன்றுவா டுவனோ

வங்கையாற் றிகழு முயர் நரசிங்க
முனையரை யருக்கருள் சுரந்த
கங்கையாற் றிகழுஞ் சடையெம திறைவர்
காதலி யன்னபூ ரணியே ௪௮
தொங்கிடு தானைத் துகிலுடை யிலங்கத்
தூயமா மலர்சிகை முடித்துச்
சங்கையே யின்றி யுலவிடு மிளமை
தனைநம்பி யுழன்றுவா டுவனோ
சங்கொளிர் கடல்சூழ் நாகையிற் றிகழுந்
தனியதி பத்தரை யாண்ட
பொங்கொளி நீற்றுப் பொலிவுடை யிறைவர்ப்
புணருமெம் மன்னபூ ரணியே ௪௯
பின்னிலை பயக்கு மின்னலைச் சிறிதும்
பிரித்துணர்ந் தறிந்திடா தினிய
கன்னியர் சுகத்தை விரும்பிடு மிளமைக்
காட்டினி லுழன்றுவா டுவனோ
பன்னிய புகழ்சேர் கலிக்கம்ப னார்க்குப்
பதமல ரளித்தினி தாண்ட
மின்னிய சடையெம் மிறைவரைத் தழுவும்
விமலையே யன்னபூ ரணியே ௫0
வருமறி யாமை குடிகொளு மன்னா
மகிழ்ச்சியைத் தருமிளை மையினை
யொருபொரு ளெனவே மதித்தறி வழிந்திவ்
வுலகினி லுழன்றுவா டுவனோ
திருவுடைக் கலியநாயனார் தனக்குத்
திருவடி யளித்தினி தாண்ட
வுருவுடைப் பரமர்க் கினிமையை யருளு
முத்தமி யன்னபூ ரணியே ௫௧
மாரவே டனக்குத் தொழில்வினை நிலனாய்
மன்னிவந் தறிவினை மயக்குஞ்
சாரமே யில்லா விளைமையைக் கருதித்
தாரணியி லுழன்றுவா டுவனோ

வீரமா ரகத்தார் சத்தியார் தமக்கே
யினிமையாந் திருவடி யளித்த
நாரமா ரிதழி மலர்முடி யிறையை
நயந்திடு மன்னபூ ரணியே ௫௨
பருவமங் கையர்கள் பதமதே யழியாப்
பதமெனக் கருதியே செருக்கிக்
கெருவமா யுலவு மிளமையைக் கருதிக்
கேடுற வுழன்றுவா டுவனோ
திருவமர் தருமை யடிகள்கா டவர்கோ
னயனார் திகழ்வுற வாண்ட
வொருவனை யெங்கள் பரமனைத் தழுவு
முத்தமி யன்னபூ ரணியே ௫௩
மாரனைப் பழிக்கும் வடிவினைச் சுமந்து
மலர்தலை யுலகினி லுலவித்
தாரணி மடவார்க் கடிமைசெய் யிளமை
தனைநம்பி யுழன்றுவா டுவனோ
சீரணி யுடைய கணம்புல்ல னார்க்குத்
திருவடி சிறப்புற வளித்த
வாரணி முடியெம் மிறைவரைத் தழுவு
மம்மையே யன்னபூ ரணியே ௫௪
வண்டுழு துடைக்கு மலர்புனை மாலை
மருக்கிளர் வாசனை யாதி
கொண்டெழில் சுமக்கு மிளமையை விரும்பிக்
குவலயத் துழன்றுவா டுவனோ
மண்டிடும் புகழ்சேர் காரியார் தமக்கு
மலரடி யளித்தினி தாண்ட
வண்டர் நாயகனை யெம்மிறை தழுவு
மன்னையே யன்னபூ ரணியே ௫௫
வனப்பெனும் வனத்தின் மதியெனுங் குரங்கு
மன்னிடத் தாவியே யேறி
நினைப்பின்றித் திரியு மிளமையை விரும்பி
நீணிலத் துழன்றுவா டுவனோ

மனைப்பெரு வாழ்க்கை யொடுங்கின்ற சீர்நெடு
மாறனார் தமக்கருள் சுரந்த
முனைப்பழம் பொருளா மெமதிறை களிக்கு
முதல்வியே யன்னபூ ரணியே ௬௬

தவத்தினி லறத்திற் சார்ந்திடப் புகுத்தாத்
தன்மையா மதிசிறந் தோங்கி
யவத்தினிற் புகுத்து மிளமையை விரும்பி
யவனியி லுழன்றுவா டுவேனை
சிவத்தினைத் தெளிந்த வாயிலார் தமக்குத்
திருவடி யளித்தினி தாண்ட
நவத்தினைத் தருமெம் மிறையவர்க் கினித்த
நங்கையே யன்னபூ ரணியே ௬௭

பெருகிய வாசைக் கடற்றிரை மாதர்
புரட்டிடக் காமமாஞ் சுறவம்
மருவியே விழுங்க மனமது கலங்கி
மங்கியே யுழன்று வாடுவேனை
திருமவர் செல்வர் முனையடு வார்க்குத்
திருவடி யளித்தினி தாண்ட
குருவமர் மேனிக் கூத்தனார் மருவுங்
குமரியே யன்னபூ ரணியே ௬௮

தவத்தினை யுடையோர் கான்றிடுஞ் சோறுய்த்
தள்ளிய பொருளினைப் பூவை
யவத்தினில் விரும்பிப் பெரிதென மதித்திவ்
வவனியி லுழன்றுவா டுவேனை
பவத்தினை வெறுத்த கழற்சிங்க னார்க்குப்
பதமல ரளித்தினி தாண்ட
சிவத்தினை மருவிக் களிப்பொடும் புணருந்
தேவியே யன்னபூ ரணியே ௬௯

பெருகு கான்யாற்றுப் பெருக்கெனக் காட்டிப்
பின்னுடன் வற்றியே வறண்டும்
அருகிடுஞ் செல்வந் தன்னையே விரும்பி
யவனியி லுழன்றுவா டுவேனை

வருபெருந் திருவா ரிடங்கழி யார்க்கு
மலரடி யளித்தினி தாண்ட
வொருபெருஞ் செல்வ ரமதிறை தழுவு
முத்தமி யன்னபூ ரணியே ௬0
பொழிந்திடு மாரிப் புதுப்புன னிகர்த்த
புல்லிய பொருளினை விரும்பி
யழிந்திடு மதியிற் பெரிதென மதித்தே
யவனியி லுழன்றுவா டுவனே
கழிந்திடும் பத்திச் செருத்துணை யாரைக்
கழறனிற் சேர்த்தினி தாண்ட
வழிந்திடு மதுவா ரிதழியார் தம்மை
மருவிடு மன்னபூ ரணியே ௬௧
ஈகையிற் சிறந்தோர் தமதிட மணுகா
திருங் கல்லை யொத்த சிந்தையர்பா
லோகையா லமரும் பொருளினை விரும்பி
யுலகினி லுழன்றுவா டுவனே
வாகையிற் பொலிந்த புகழ்த்துணை யாரை
மலரடி யளித்தினி தாண்ட
சாகையிற் சிறந்த வேதமார் கண்டர்
தழுவிடு மன்னபூ ரணியே ௬௨
இழிவுறு லோபர்க் கினமென வவர்பா
லிருந்துமண் ணுகிடும் பொருளை
யழிதகை மதியாற் பெரிதென நினைத்திவ்
வவனியி லுழன்றுவா டுவனே
கொழிபுனற் பதிவாழ் கோட்புலி யாரைக்
குலவிடப் பதமளித் தாண்ட
விழிதிகழ் நுதலா ரமதிறை தழுவும்
விமலையே யன்னபூ ரணியே ௬௩
பெரியரை மதியாத் திறமையும் மடமைப்
பெருமையு மளித்திடும் பொருளை
விரிகட லுலகிற் பெரிதென மதித்து
வீணிலே யுழன்றுவா டுவனே

பரிவொடு தொழுத பத்தராய்ப் பணிவார்
யாவர்க்கும் பதமல ரளித்த
நரிபரி யாக்கும் பரமரெம் மிறைவர்
நாயகி யன்னபூ ரணியே ௬௪.

சிற்றினஞ் சேர்ந்து தீத்தொழில் புரியுந்
திறத்தினை யளித்திடும் பொருளைப்
பற்றியே நிலையென் றகத்தினி னினைத்துப்
பரிந்துநா னுழன்றுவா டுவனோ
நற்றவஞ் சிறந்து பரமனைப் பாடும்
நல்லவர் கூட்டத்தைக் காத்த
கொற்றமால் விடையார் தம்மையே புணருங்
குமரியே யன்னபூ ரணியே ௬௫

தந்தையைத் தாயைக் குரவரைக் குருவைத்
தன்னருந் தெய்வத்தை மதியாச்
சிந்தையை யளிக்கும் பொருளினை விரும்பிச்
சிவசிவா வுழன்றுவா டுவனோ
வந்தனை முறையாற் சித்தத்தைச் சிவன்பால்
வைத்தவர் கூட்டத்தைக் காத்த
வெந்தையாம் பரமர் தோளிணை மருவு
மிறைவியே யன்னபூ ரணியே ௬௬

சேரிட மிதுவென் றறிந்துமே சேராத்
திறமுள புல்லிய பொருளைப்
பாரினில் விரும்பி நிலையென மதித்துப்
பரிந்துநா னுழன்றுவா டுவனோ
தேரினிற் சிறந்த வாரூரினிற் பிறந்தோர்
சீர் பெற மகிழ்ந்தினி தாண்ட
தாரினிற் சிறந்த கொன்றையை மிலைவோர்
தமைப்புண ரன்னபூ ரணியே ௬௭

ஈனர்க டமையு மிந்திர ரெனவே
யெண்ணிடும் படிமதி யளிக்குந்
தீனரைச் சேராப் பொருளினை விரும்பிச்
சிந்தைநா னுழன்றுவா டுவனோ

மோனராய் முப்போ துந்திரு மேனி
தீண்டுவார் தமைமுன்னிக் காத்த
ஞான நாயகராம் பரமரைத் தழுவும்
நங்கையே யன்னபூ ரணியே ௬அ

புறத்திடு காட்டுண் மடற்பனை யதனுட்
பொருந்திடுந் தேனென வெவர்க்கும்
அறத்துறை தனக்கு மணுகிடாப் பொருளை
யவனியி னம்பிவா டுவனோ
திறத்தொடு முழுநீ றணிந்திடு முனிவர்
சேகரந் தனையினி தாண்ட
புறத்துறு காட்டி லாடுமெம் மிறையைப்
புணர்ந்திடு மன்னபூ ரணியே ௬௯

கொலைகள வாதி காமமும் பொய்யுங்
கொடுமைசெய் கள்ளொடு சூதும்
நிலைபெற வளர்க்கும் பொருளினை விரும்பி
நீணிலத் துழன்றுவா டுவனோ
வலைபுனற் படியி லப்பாலு மடியைச்
சார்ந்தவர் யாரையுங் காத்த
கலைமதிச் சடையெம் மிறைவரைத் தழுவுங்
கன்னியே யன்னபூ ரணியே ௭௦

நானெனு மகந்தை வளர்த்திடுந் தாயாய்
நணுகியே மலிந்திடும் பொருளை
நானில மதனிற் பெரிதென விரும்பி
நாளுமே யுழன்றுவா டுவனோ
மேனிலை யதனின் மனத்தளி யியற்றி
விளங்கிய பூசலார்க் காத்த
வானிட பத்தி லமருமெம் மிறையை
யணைந்திடு மன்னபூ ரணியே ௭௧

நல்லவர் தமையுந் தீயராய்ச் செய்து
நரகத்திற் சேர்த்திடும் பொருளைப்
பல்லவர் தமக்கும் பகைதரும் பொருளைப்
பற்றியே யுழன்றுவா டுவனோ

புலமண் குழுவைத் தொலைத்தெமைக் காத்துப்
புனிதநீ றளித்திடு மம்மை
யல்லறீர் மங்கைக் கரசியார்க் காத்த
வரன்புண ரன்னபூ ரணியே
பத்திமை ஞானப் பரிசினுக் கென்றும்
பகையதாய் வளர்ந்திடும் பொருளை
நத்தியே யடியேன் பெரிதென மதித்து
நானிலத் துழன்றுவா டுவேனோ
சித்திரையத் தருமைந் [illegible] னமுஞ்
செபித்திடு நேசனார்க் காத்து
முத்திலை யளித்த விறைவனைப்புணரு
முதல்வியே யன்னபூ ரணியே
வல்லமை மிகுந்த வைம்புல வேடர்
மருவிடும் வனத்திடைப் பிழைத்து
நல்லவ னாக வேண்டுமென் றெண்ணி
நானுமே யுழன்றுவா டுவேனோ
மல்லணி தோளார் கோச்செங்கட் சோழர்
மகிழ்வுற மலரடி யளித்த
வல்லணி கண்டத் திறைவரைத் தழுவு
மம்மையே யனனபூ ரணியே எச
இருவினை யான விருதலைக் கொள்ளி
யுள்ளெறும் பொத்துநா னிளைத்து
வருவினை தேடி மாநிலத் தென்று
மயங்கியே யுழன்றுவா டுவேனோ
திருவினை யுடைய திருநீலகண்ட யாழ்ப்
பாணர்க்குத் திருவடி யளித்த
மருவினை யுடைய விதழிசேர் சடையார்
மருவிடு மன்னபூ ரணியே எ௫
கூடிய வெறும்புக் கூட்டத்தி னிடைநாங்
கூழெனக் கொடும்பு லாதிகடாஞ்
சாடியே மொய்க்கத் தனியனாய் விழித்துத்
தரணியி லுழன்றுவா டுவேனோ

நீடிய புகழ்சேர் சடையனுர் தமையே
நித்தியத் திருவடி சேர்த்த
வாடிய திருத்தா ளையரைப் புணரு
மம்மையே யன்னபூ ரணியே எசு

காலையு மாலை கடும்பக றனிலுங்
கதித்திடும் பசிக்குண்டி தேடல்
வேலையாய்த் திரிந்தே மெலிந்து நானலுத்து
வீணிலே யுழன்றுவா டுவனோ
சோலையார் நாவ லிசைஞானி யார்க்குத்
தூயநற் பதமளித் தாண்ட
மாலையார் மேனி யிறைவரைத் தழுவு
மங்கையே யன்னபூ ரணியே எஎ

காற்றினிற் பூளைப் பூவெனப் பறந்து
கனத்திடு நிதிமிகத் தேடி
வாற்றவுங் கில்லே னையகோ விந்த
வவனியி லுழன்றுவா டுவனோ
வாற்ற லார்திருமா மாளிகைத் தேவ
ரணியிசை கேட்டருள் சுரந்த
நீற்றெழின் மேனி யிறைவரைத் தழுவு
நேசியே யன்னபூ ரணியே எஅ

செக்கினிற் சிக்கு மெருதெனத் தினமுஞ்
சேர்ந்தவர் மனமது களிக்கப்
பக்கங்க ளெங்கும் பரவியே திரிந்து
படுபொரு டேடிவா டுவனோ
தக்கநன் மதிசேர் சேந்தனு ரிசையைத்
தண்ணளி யுடனுவந் தாண்ட
நக்கனெம் மிறைவன் றனைத்தினந் தழுவு
நாயகி யன்னபூ ரணியே எகூ

மலையென நிதியைக் குவித்துவைத் திடினு
மனங்களிக் காதபே யுறவை
நிலையென நினைத்துச் செலும்வழி மறந்து
நித்தமு முழன்றுவா டுவனோ

கலையதை யுணரு நங்கரு வூரர்
கனியிசை கேட்டருள் சுரநத
சிலையதைத் தவரா யெடுத்தவர் தழுவுந்
தேவியே யன்னபூ ரணியே அ(

பிறந்திடும் பொழுது மிறந்திடும் பொழுதும்
பெறலிலாப் பொருளினுக் குடைந்தே
யறந்திகழ் நெறியை யணுகிடா தேங்கி
யவனியி லுழன்றுவா டுவனோ
மறந்தெறு நம்பி காடகம் பியர்சொல்
மகிழ்ந் தவர்க்கினி தருள்சுரந்த
வறந்திகழ் மேனி யண்ணலைப் புணரு
மன்னையே யன்னபூ ரணியே அச

மைந்தரைப் பொருளை மனைவியைப் பூவை
மற்றுள வுறவினைச் சதமாய்ச்
சிந்தனை புரிந்து செலும்வழி மறந்து
தினமுநா னுழன்றுவா டுவனோ
வந்தனை புரியுங் கண்ட ராதித்தர்
மணியிசை கேட்டருள் சுரந்த
கந்தனைப் பயந்த கடவுளைப் புணருங்
கன்னியே யன்னபூ ரணியே அஉ

எரிகின்ற தீபச் சுடரினைக் கனியென்
றெணியுறும் விட்டில்போற் புவியைப்
பரிவொடும் விரும்பி நன்னெறி மறந்து
பாவியே னுழன்றுவா டுவனோ
தெரிதருங் கலைவே ணுட்டடி புகலுஞ்
செழிப்புறு மிசைக் கருள்புரிந்த
விரிதருங் கரித்தோ லுடுத்திடும் பரனை
விழைந்திடு மன்னபூ ரணியே அந

உறுத்திடுங் கொடிய வல்வினைக் காட்டி
லுலைந்துலைந் தொதுங்கிட மின்றும்
வெறுத்திடு மதியை யடைந்திடற் கில்லேன்
வீணிலே யுழன்றுவா டுவனோ

வறுத்திடும் பிறவித் திருவாலி யமுதர்
மலரிசை கேட்டருள் சுரந்த
கறுத்திடுங் கண்டர் தமைத்தினந் தழுவுங்
கன்னியே யன்னபூ ரணியே அச

வலைத்தலை மானினை யொத்தெனைச் சூழ்ந்தோர்
வசத்தினிற் சிக்கியே தினமுந்
தலைத்தலை வெவ்வே றிடரினால் வெம்பித்
தமியனு முழன்றுவா டுவனோ
கலைத்தலைப் புருடோத்தம நம்பியாரின்
கனிந்திடு மிசைக் கருள்புரிந்த
வலைத்தலை யுடைய பரமனைப் புணரு
மம்மையே யன்னபூ ரணியே அரு

நித்தமுங் கண்ணாற் காண்குறுங் காட்சி
நிலையென மதித்திந்த வுலகிற்
பித்தனய்த் திரிந்து செலும்நெறி மறந்து
பேதையே னுழன்றுவா டுவனோ
சித்தமார் பத்தி திகழ்ந்திடுஞ் சேதி
ராயர்சொற் சிறப்பிசைக் குகந்த
வத்தனை மெங்க ளிறைவரைத் தழுவு
மம்மையே யன்னபூ ரணியே அசு

கண்ணினாற் றினமும் பிறப்பவ ரிறப்போர்
கணக்கினைக் கண்டுகொண் டிருந்து
மெண்ணினிற் பதிக்க வறியவுங் கில்லே
னினைந்துநைந் துழன்றுவா டுவனோ
திண்ணிய சீர்த்திச் சேக்கிழார் பெருமான்
சிறந்திடத் திருவடி யளித்த
தண்ணிய கருணைப் பரமரைத் தழுவுந்
தையலே யன்னபூ ரணியே அஎ

சிறுமியர் வண்டல் வீட்டினைப் போலச்
சிறுபொழு தழிந்திடும் வாழ்வை
வெறுமை செய் துன்றன்பதம் வழுத்தாது
வீணிலே யுழன்றுவா டுவனே

குறுமுனி யாயதமிழ் முனி வாழ்த்துக்
குணமதற் கினிதருள் சுரந்த
நறுமணங் கமழு மிதழியார் சடையர்
நாயகி யன்னபூ ரணியே அஅ

மண்பிளந் தெழுந்து வெளிவரு மீயல்
வாழ்வினை யொத்த வாழ்விதனை
யெண்பிளந் தேக வெறுத்துனைப் பணியா
தின்னமு முழன்றுவா டுவனோ
பண்பறிந் துலக நிலைபெற நீதி
பகர்ந்த வள்ளுவர் தமைக்காத்த
விண்புகழ் முடியா ரமதிறை தழுவும்.
விமலையே யன்னபூ ரணியே அகூ

வம்புலாங் கொங்கை மடவரா லுனது
மலரடி தொழு தணுகாமற்
கொம்பிலாக் கொடிபோ லலைந்துநான் மெலிந்து
குவலயத் தின்னும்வா டுவனோ
வெம்பிரான் சேயா யடைந்தருள் சுரந்த
வெங்கள் வெண்காடரைக் காத்த
தம்பிரா ஞரை யினிமையாய்த் தழுவுந்
தலைவியே யன்னபூ ரணியே கூ0

முத்தணி கொங்கை முழுமதி முகத்தாய்
முளரியா நின்மலர்ப் பதத்தை
நத்தியே தொழுது நானணுகாம
ஞனிலத் தின்னும் வாடுவனோ
வித்தரை காத்த பத்திர கிரியார்க்
கினிமையாம் பதமளித் தாண்ட
வத்தனு மெங்கள் சிவபெரு மானை
யணைந்திடு மன்னபூ ரணியே கூக

கருணையே பொழியு மங்கயற் கணிநின்
கழல்பணிந் துனை யணுகாம
லிருளையே பகலென் றிசைந்திடு மதியா
லின்னமு முழன்றுவா டுவனோ

வருளையே பெறுங் குமாரகுரு பரரை
யாதரித் தடிமல ரளித்த
தெருளையே யளிக்குஞ் சிவபெரு மானைச்
சேர்ந்திடு மன்னபூ ரணியே கஉ
நின்னருட்சூலி னுலகெலாம் பயந்த
நிமலியே நின்மல ரடியைப்
பன்னியே தொழுது பயனடை யாமற்
பாரினி லுழன்றுவா டுவனே
நன்னய மளித்த சிவப்பிர காச
நாதனுக் கினிதருள் சுரந்த
பன்ன காபரண னமதிறை தழுவும்
பாவையே யன்னபூ ரணியே கங
நினையன்றி வேறுகெதி யில்லை யென்னு
நினைப்பெனக் கினுமுதிக் காமன்
மனைபொருண் மகவென் றிடர்க்கடல் விழுந்து
மங்கியே யுழன்றுவா டுவனே
வினைதனைத் தகித்த தாயுமா னவர்க்கு
விரைமலர்ப் பதமளித் தாண்ட
நனைகம ழிதழி மலரணி பரமர்
நாயகி யன்னபூ ரணியே கச
இப்பிறப் பகன்று லெப்பிறப் புறுமோ
வெனமனங் கலங்கியே யுனது
செப்பமார் பதத்தைத் தினந் துதிக்காமற்
றேவிநா னுழன்றுவா டுவனே
வொப்பவே சந்தத் திருப்புகழ் பாடு
மூயருண கிரியை யாண்ட
வப்பணி சடையா ரெமதிறை தழுவு
மம்மையே யன்னபூ ரணியே கரு
வேறுவே றுயவுன் றிரு நாமம்
வியப்பொடு நாத்தழும் பேறக்
கூறியே யெனது பவப்பிணி தொலைக்கக்
குறுகிடா தின்னம் வாடுவனே

நீறிடும்நம்பி யாண்டார் நம்பி தனையே
நித்தியத் திருவடி சேர்த்த
வாறிடு சடையா ரமதிறை தழுவு
மன்னையே யன்னபூ ரணியே ௬௬
அறந்திகழ் கொடிநின் னடிமல ரதனை
யனுதினந் துதித்திட மனத்தின்
மறந்திருந் திடிற்பின் மறலிவந் திடுங்கான்
மங்கியே யுழன்றுவா டுவனே
சிறந்திடுந் தமிழ்தேர் கீரனைக் காத்துத்
திருவடி யளித்தினி தாண்ட
மறந்திகழ் சூலப் படையிறை தழுவு
மங்கையே யன்னபூ ரணியே ௬எ
தீவினை நிறைந்த பெட்டக மனையேன்
றிருவடி தினந்தொழு தறியேன்
பாவினை யுனது பாதத்தி லணியேன்
பரிதபித் துழன்றுவா டுவனே
மேவிடு மிடைக்காட் டடியவர் நிமித்தம்
வேறிட மமர்ந்தினி தாண்ட
கூவிள முடியா ரமதிறை தழுவுங்
குமரியே யன்னபூ ரணியே ௬அ
எத்தகைக் கொடிய பாதகஞ் செயினு
மினியெனக் கொரு கெதியில்லை
மத்தக முலையா யென்றனை வழுத்து
மதியெனக் கின்றி வாடுவனே
வித்தரை வருங்கா ளுவிளுற் சிவவென்
றிசைத்திடும் பெரியரை யாண்ட
மத்தமார் முடியா ரமதிறை தழுவு
மங்கையே யன்னபூ ரணியே ௬௯
மலர்ந்திடு கமல முகமது திகழ
வளரரிப் பிடர்மிசை யெழுந்து
நலந்தர வருநா ளெதுவென நினைத்து
நானுமே மயங்கி வாடுவனே

வலம்படு முலகிற் றமிழையுஞ் சைவ
மரபையும் வளர்த்திடு மௌவை
நலம்பெறக் காத்த பரமனார் தழுவு
நாயகி யன்னபூ ரணியே ௧00
மங்கல வாழ்வும் பெரும்பொருட் செருக்கு
மலிந்திடும் வெற்றியூ ரதனிற்
றங்கியே கோயில் கொண்டு வீற்றிருக்குந்
தையலா ளன்னபூ ரணியின்
றுங்கநற் பாதத் தணிந்திடு மாலைத்
தொடையொரு நூற்றினை யன்பா
யிங்கித மாகப் படிப்பவர் கேட்போ
ரிடரின்றி யுய்ந்துவாழ் குவரே ௧0௧

முற்றும்.

உ

சிவமயம்.

ஸ்ரீ அன்னபூரணியம்பாள் துணை.

மூன்றவது

# போற்றிக் கலிவெண்பா.

காப்பு—வெண்பா.

அறந்தழைக்கும் வெற்றிநக ரம்பொற் றளியிற்
சிறந்தழைக்க வாழுமெங்கள் தெய்வம்—நிறந்தழைக்கும்
எம்மன்ன பூரணிகாற் கேற்றுங் கலிவெண்பாச்
செம்மையுற வானையருள் செய்.

நூல்.

கலி வெண்பா.

பூமேவு செங்கமலப் புத்தே ளினிதளிக்கும்
பாமேவு முந்நீர்ப் பரவையுடை—தாமேவு
பாரிற் சிறந்து பலவளனும் பன்னலனுஞ்
சீரிற் சிறந்து திகழ்ந்தோங்கும்—பேரிற்

பெரிய வழுதி பிறங்குந் தமிழ்சே
ரரிய திருநா டதனிற்—றெரியுமெழிற்
பொங்கரவ மாத்தி புனறும்பை வெள்ளெருக்குத்
திங்க ளறுகு செறிகரந்தை—துங்கமுறு
வண்கூ விளமத்த மாரும லேசெறியுந்
தண்கொன்றை கொக்கிறகு தாங்கிகழும்—கண்குலவு
மெங்களிறை சங்கரனா ரின்பமொடு கோயில்கொண்டு
தங்குதலம் பன்னான்கு தன்னிலொன்றாய்த்—துங்கமுறு
பொற்கோ புரத்தின் பொலிவு மதிலழகுங்
கற்கோ புரத்தின் கதிரழகும்—விற்காலுங்
கோயி லழகுங் குளத்தழகு மையமதி
னேயு மண்டபத்தி னெழிலழகும்—வாயிற்
சிறப்பழகு முன்னே திகழு மண்டபத்தின்
பரப்பழகும் பல்வே றழகும்—இறப்ப
வொளிசேர் கொடிமரத்தி னுற்ற வழகும்
வளிசேர் வசந்த மருவிக்—களிசேர்ந்தெம்
மம்மையப்பர் தாமே யமருமணி மண்டபத்தின்
செம்மை பரவுஞ் சிறப்பழகுஞ்—சும்மைதரு
தேரி னழகுந் தெருவழகு மந்நகரச்
சீரி னழகுஞ் சிறந்தோங்கிப்—பாரி
லிதுவே யிதற்குநிக ரென்றுவிண்ணோ ரேத்துஞ்
சதுரா யிலங்குந் தலமாய்—மதுரைதனைக்
காணுமுன்னே கண்டதொரு கானப்பே ரென்றுபெயர்
பூணுமந்த மேலான பொற்புமிக்க—மாணுடைய
சோமேசர் காளீசர் சுந்தரே சக்கடவுள்
தாமேதந் தேவியர்க டம்மோடும்—மாமையுறச்
சேர்ந்து களித்துத் திருக்கோயில் கொண்டெழிலா
யார்ந்து விளங்கு மணிநகராந்—தேர்ந்த
கலைப்புலவோ ரேத்துமுயர் காளையார் கோயிற்
றலைப்புடைய சீர்த்திதனைத் தாங்கி—நிலைப்பாய்த்
திகழுமுயர் வெற்றித் திருநகரந் தன்னிற்
புகழுமுயர் நாவலர்கள் போற்ற—விகழ்வின்றித்

தங்குடிகள் வாழத் தருந்தண் ணருள்சுரந்து
மங்களம தான மணிக்கோயிற்—றங்கிவளர்
தாயே யெமைக்காக்குஞ் சங்கரியே மாமறைக
ளாயச் சிறந்தோங்கு மம்மையே—சேயேங்கள்
வேண்டும் வரத்தை விரைந்தளிக்கு முத்தமிநிற்
காண்டுங் கிருபைசெய்து காபோற்றி—பாண்டியர்கள்
ஏவரினு மேலா யிலங்குமலை யத்துவச
காவலன் றன்மகத்திற் கன்னியென—மேவியொரு
முத்தனத்தோ டேதோன்றி மோகமுறு நல்வழுதி
சித்தமகிழ் வித்தளித்த சீர்போற்றி—யித்தரணி
தன்னையொரு கோலாற் றனியரசு தான்புரிந்து
கன்னியிறை யாயமர்ந்த கால்போற்றி—வன்னமுறு
சொக்கருக்குத் தன்னிறைமை தொன்முறையி லேயளித்தந்
நக்கருடன் வாழ்ந்த நலம்போற்றித்—தக்கனுக்குப்
பிள்ளையாய் வந்த பிழைதீர நற்றவத்தைக்
கொள்ளையாய்க் கொண்ட குணம்போற்றி—கள்ளொழுகு
மாலையணி மேனை மடியிற் றிருச்சேயாய்ப்
பாலருந்தி யாடும் பதம்போற்றி—சீலமுறு
புன்னைக் கடற்றுறைவன் போற்றமக வாய்வளர்ந்த
வன்னையுன் றன் செய்ய வடிபோற்றி—பின்னையொடு
பாமகளுந் தொண்டுசெய்து பத்தியுட னேபரவுஞ்
சேமத் திருத்தாளின் சீர்போற்றி—காமர்நிறை
யாயன்ன பூரணிநின் னஞ்சிலம்பு கூவியுறுஞ்
சேய வடிக்கமலச் சீர்போற்றி—மேயபுகழ்க்
கானத் தலத்திலுயர் காளியெனத் தோன்றிவந்து
வானைப் புரந்த வளம்போற்றி—யீனமதிச்
சண்டன் றனைப்பொருது தான்வீட்டி யேயுயர்ந்து
பண்டவனி காத்த பதம்போற்றி—யண்டிவருங்
கன்னியருக் கன்னங் கனிந்தளித்தந் நாண்முதலா
மன்னுமன்ன பூரணிப்பேர் மான்போற்றி—பின்னுமிந்தப்
பாரினுரு வாட்டிப் பதியி லமர்ந்திருந்து
சீரியற்றுஞ் சீர்த்தித் திறம்போற்றி—பேரியல்சேர்

மேலைப் பனைசைநகர் மேவிக் கொலுவிருந்தவ்
வேலையவ னாடும் விதம்போற்றி—சீலமுறு
கீழைப் பனைசை கிளர்ந்துதிருக் கோயில்கொண்டு
வாழப் பரிந்த மனம்போற்றி—யூழையென்றே
பாகனே ரிப்பதியிற் பண்பான கோயில்கொண்டு
மோகமுட னார்ந்த முதல்போற்றி—வாகாக
வோங்குஞ் சிறுவா புரியி லுவந்தடைந்து
பாங்குறவே யார்ந்த பதம்போற்றி—தேங்கமழுஞ்
சோலைசெறி கல்விநகர் தோன்றிச் சிறந்தமர்ந்து
மாலையணி கொண்ட வளம்போற்றி—சீலமுறு
மாலநகர் தன்னி னணிய கொலுவிருந்து
ஞாலம் புரந்த நலம்போற்றி—கோலமுறு
பூங்கொடியார் வாழும் புனல்சே ரணிகீழைப்
பூங்குடியில் வாழும் புகழ்போற்றி—மாங்குயில்கண்
மன்னுமொரு மாளகண்டான் மன்னி யமர்ந்திருந்த
வன்னமுறு பாதவளம் போற்றி—நன்னயமாய்
வெற்றிநகர் தன்னைத்தன் மேலா முறையிடமாய்ப்
பற்றி யமரும் பதம்போற்றி—துற்றொளிசேர்
சோதி வனத்தமர்ந்து சோதிமய மாயிலங்கு
மாதிமுத லந்தா மருள்போற்றி—யோதிநிதந்
தேடிமறை காணுத் திறம்போற்றி யம்மறையுட்
கூடி யொளிக்குங் குணம்போற்றி—பீடிலங்கு
மாகமத்து ளாரு மருள்போற்றி யாகமத்தை
மோகமுறத் தந்த முதல்போற்றி—யாகமங்கள்
ளாருமருஞ் சாரமா யாம்பல் லுபநிடதஞ்
சேருஞ் சிவந்தவடிச் சீர்போற்றி—சீராக
மன்னும் புராண வகையுட் செறிந்திலங்கி
மின்னித் திகழும் விதம்போற்றி—பன்னு
மிதிகாசந் தன்னி லிருந்திலங்கி யென்று
மதிகாரஞ் செய்யு மருள்போற்றி—விதிமுதலா
மைவருக்குந் தத்த மருந்தொழிலைச் செய்திடவே
கைவருத்துஞ் சீதக் கழல்போற்றி—மெய்வருத்தம்

பாரா தரியதவம் பண்ணுமுயர் சிலருக்கு
நேராக நின்ற நிலைபோற்றி—யோராதா
ருள்ளத் தொளித்தே யுலவும் பதம்போற்றி
கள்ளத்தை விட்டார் கதிபோற்றி—வள்ளத்திற்
பாலைக் கறந்துசம் பந்த ருணவளித்த
கோலத் தனத்தின் குறிபோற்றி—ஞாலத்தி
லெத்திறத்தா ருடுவரோ வத்திறத்தா லன்னவர்க்குச்
சித்திதந்து காக்குஞ் செயல்போற்றி—பத்திமையாய்ப்
பாடிக் கனிந்து பரவு மடியர்களைத்
தேடிவந்து காக்குஞ் செயல்போற்றி—பீடிலங்க
முற்றத் துறந்தவரா மோன முனிவருக்குத்
துற்றிவந்து தோற்றுந் துணைபோற்றி—வெற்றியொடு
கொற்றமுடி சூடிக் குவலயத்தி னிற்கலியைச்
செற்றுலகை யாண்ட திறல் போற்றி—வற்றாத
சீதப் புனல்வைகை சேரும் மதுரைதனின்
வேதப் பொருளாம் விறல் போற்றி—நாத
வடிவா யிலங்கும் வலம்போற்றி நாத
முடிவான சோதிமுதல் போற்றி—கொடிய
வவுணர்களை யென்று மழித்துலகங் காத்த
தவலருஞ்சீர்த் தாளிணையே போற்றி—யவலமதி ௬௦
விட்டுலகை வென்ற விறலுடையார் கூவுமுனங்
கிட்டிவந்து காக்குங் கிளிபோற்றி—மட்டிழியும்
பூவின் மணமாய்ப் பொருந்துஞ் செயல்போற்றி
காவி னிழலாங் கதிபோற்றி—பாவிற்
றிகழும் பொருள்வடிவின் சீர்போற்றி மூவர்
புகழுந் திருவுருவே போற்றி—நிகழ்வினோடு
மன்னுமுக் காலத்தும் மன்னும் பொருள்போற்றிப்
பின்னுங்கா லங்கடந்த பேர்போற்றி—மன்னுமிந்த
வண்டங்க ளெல்லா மளித்த வருள்போற்றிப்
பிண்டங்க ளுள்ளொளிரும் பேர்போற்றி—யண்டத்தின்
மேலே பெரிதாய் விளங்கும் பொருள்போற்றி
மாலே யளிக்கு மணிபோற்றி—சாலச்

சிறிய வணுவிற் சிறிய வடிவக்
குறிய வுருக்கோலம் போற்றி—மறியைக்
கரத்தேந்து மெங்களிறை கண்ணுதலா ரீசர்
பரத்துள் ளுலவு பரம்போற்றி—சிரத்திலன்று
செந்தீக் கொழுந்தை நிகர்க்குஞ் சிகையாடப்
பந்திபந்தி யாய்ப்படைகள் பற்றிவர—வெந்திறல்சேர்
மேதித் தலையவுணன் மேதினியிற் றானழியக்
காதித் தொலைத்த கழல்போற்றி—யாதிரையில்
வந்த பரமர் மகிழக் கரந்தழுவச்
சந்த மணங்கொண்ட சதுர்போற்றி—தொந்தமுறும்
நல்லார்க்கு வல்வினையை நாடவொட்டா தேயகற்றி
வெல்லமதி தந்த விறல்போற்றி—யல்லலுறும்
பத்தர் தமக்குப் பரிந்தின் னலைப்போக்குஞ்
சித்தஞ் செறிந்த திறல் போற்றி—நத்தணியுஞ்
சீதரனார் தங்கையெனத் தேவர் தினம்புகழ்ந்தே
யோதலுறு தெய்வ வுருப்போற்றி—போதலர்ந்து
தேனொழுகி நாறிச் செறிந்து கறுத்திருண்டு
கானொழுகுங் கூந்தற் கதிர்போற்றி—வானொழுகும்
பாதிப் பிறைநிகர்த்துப் பானீற் றொளிமிளிருஞ்
சீதத் திருநுதலின் சீர்போற்றி—மாதிறல்சேர்
மாரன் கரமதனின் மன்னுஞ் சிலையெனவே
யாரும் புருவத் தணிபோற்றி—பாரதனில்
வேலோ கணைதானோ மேவுங் கருங்கயலோ
நீல மலரோ நெடுவாளோ—மால்கருணை
தங்குகின்ற வள்ளமோ தாவுங் கருவண்டோ
பொங்கு கமலப் புதுமலரோ—விங்கெதனைச்
சாற்றலா மென்றே தனியடியா ரேத்தெடுக்கு
மாற்றல் விழியி னணிபோற்றி—நாற்றமதைக்
கண்டு நுகருங் கனிந்த குமிழைநிகர்
துண்ட வணியின் சுடர் போற்றி—யண்டமெலாங்
காட்டுமுய ராடி நிகர்த்தகபோ லம்போற்றி
தீட்டும் பவளவிதழ்ச் சீர்போற்றி—தோட்டலர்ந்த

தேனொழுகுஞ் செங்குமுதச் செவ்வா யொளிபோற்றி
வானொளிசெய் முத்தநகை வாள்போற்றி—பானிறத்துச்
சங்கங் கமுகு தனைநிகர்த்துச் சோதியொளிர்
துங்கமிடற்றின் சுடர்போற்றி—தங்குமிந்த
மாநிலமு மேனிலத்தின் வர்க்கங்க ளண்டமெலாந்
தானே யழிந்த தறுவாயும்—வானேறு
மிந்த்ராதி தேவ ரெழிற்பிரமன் விண்டுவொடு
மந்தமுறுங் கால மதுதனிலுஞ்—சந்தமுறப்
பங்கில் விளங்கிப் பரமன் விழிகளிக்கத்
தங்கிவளர் மங்கலநாண் டான்போற்றி—துங்கமுற
வேயை நிகர்த்து விளங்குமிரு தோள்போற்றி
சேய மலர்க்கரத்தின் சீர்போற்றி—மேயபுகழ்க்
குன்றை நிகர்த்தென்றுங் குன்றாம லேவளர்ந்து
துன்று முலையின் றுணைபோற்றி—துன்றுமலை
மேலருவி யென்ன விளங்கிடுமுத் தாரமணி
சீலமொடு சேருஞ் செயல்போற்றி—காலுமொளி
மாகலையின் வர்க்கங்க ளென்ன வமைத்துமன்னு
மேகலையின் சோதி வெயில்போற்றி—மோகமுடன்
பொன்னுல நற்றளிரைப் போன்றண்ட மீன்றென்று
மின்னு மகட்டின் வியம்போற்றி—தன்னைநிக
ரந்திக் கமல மதைநிகர்த்து நீர்ச்சுழியா
முந்திக் கமலத் தொளிபோற்றி—வந்தெனவு
மன்னு முடுக்கெனவும் வாடுங் கொடியெனவு
மின்ன விழையெனவு மேவுமுரை—தன்னைக்கொண்
டுண்டோ விலையோவென் றோதலுற்றுத் தானொசிந்து
கண்டோர் தொழுநுணிடைக் கால்போற்றி—யண்டர்பதி
மேவு மரம்பையர்கண் மேவு மரம்பையெனத்
தாவு குறங்கின் றகைபோற்றி—யோவியர்கள்
தீட்ட வொண்ணா தாகித் திகழும் வராலையொத்துக்
காட்டுங் கணைக்காற் கதிர்போற்றி—பாட்டெழுதும்
புத்தகமோ வென்னும் புறவடியுந் தான்போற்றி
புத்தனிச்ச மாமலரைப் போன்றுயர்ந்து—நித்தநித்தம்

வந்துதொழுந் தேவர் மணிமகுடந் தானிடறிச்
சிந்து மணிகள் செறிந்தழுத்தி—யந்திநிறம்
போலச் சிவந்து புதுத்தாமரை மலரெக்
காலத்தினு மிதித்துக் கன்றியே—யாலந்
தனை நுகரு மீசன் சடைப்பிறையின் கோட்டு
முனையழுத்திப் புண்ணாகி மொய்த்த—நனைமலரா
லாறியே செம்பஞ் சனையூட்டி மாலடியார்
கூறிடும் பாமாலை கொண்டுயர்ந்து—மீறி
வெளியெங்கு மாகி விரிந்துசிறுத் தோங்கி
யொளிபொங்கி யொப்பிலவா யாகி—யளிதங்கு
பூவிற் பொலிந்தோங்கிப் புன்மையே நுவுரைக்கும்
பாவிற் பொலிந்த பதம்போற்றி—பூவிற்
சிறந்து விளங்கித் திசையாவும் போற்ற
வறந்தவா தானநெறி யார்ந்து—மறந்தடிந்த
வண்டமிழ்சேர் பாண்டி வளநாட்டி லெட்டெட்டுக்
கொண்ட திருவிளையா டற்குனித்தே—யண்டர்பதி
தந்த விமானந் தனிற்றழைத்துத் தேவியுடன்
சந்ததமுங் கோயில்கொண்டு தான்வளரும்—நந்தலிலாக்
கூடல் புனல்வாயில் குற்றால மாப்பனூ
ரேடகநெல் வேலியிரா மேச—மாடானை
தென்பரங் குன்றஞ்சுழியல் தென்றிருப்புத் தூர்கானை
வன்கொடுங் குன்றம்பூ வணமவையி—னின்பமுடன்
தங்கு மிறைவர் தடந்தோண் மருவியருள்
பொங்கிவள ரின்பப் பொருள்போற்றி—சங்கத்
திருந்த புலவ ரினிதாராய்ந் தேற்று
மருந்தமிழைத் தாங்கு மருள்போற்றி—யருந்தவர்கள்
போற்று மலயமுனி போற்ற மனங்கனிந்தே
யாற்ற லளித்த வருள்போற்றி—நீற்றையிட்டுச்
சுற்றுமதில் செய்த தூய திருப்பதியாம்
வற்றாத நீரூறும் வண்மையுள்ள—பற்றலரின்
தேனைக்கா வூற்றுஞ் செறிந்த பொழில்சூழு
மானைக்கா மேவு மருள்போற்றி—மானைக்காய்

நீலவிழி மின்னார் நிறையுந் திருத்தில்லைக்
கோலமன்று ளாருங் குறிபோற்றி—சீலமதா
பிச்சித் தவர்க்கவரி னிச்சை தனையளிக்குங்
கச்சித் தலத்தின் கதிர்போற்றி—நச்சரவம்
பற்றுந் தியாகர் பவனி வருஞ் சிறந்த
வொற்றித் தலத்தி னொளிபோற்றி—சுற்றும்வினை
போக்கும் பகீரதியார் புண்ணியஞ்சேர் நற்பதியா
மேக்குயர்ந்து நாளும் விளங்கியுறுந்—தேக்கமழுங்
காசித் தலத்தமருங் கண்ணுதலார் பாகத்தி
னேசித் திருக்கும் நிலைபோற்றி—பூசித்தோர்க்
கின்பஞ் செனிக்கு மியலார் விருத்தகிரி
யன்பிற் கனிந்த வருள்போற்றி—பொன்பொலியும்
புள்ளிருக்கும் வேளூர்ப் புராதனமா நற்றலத்தி
னுள்ளிருக்குஞ் சோதி யுருப்போற்றி—தெள்ளியரா
ரண்ணா மலையி னமருமிறை பாகத்தி
லுண்ணா முலையா மொளிபோற்றி—விண்ணாட
ரோகை யுடன்போற்ற வொளிக்குங் கடல்சூழும்
நாகைத் தலத்தி னலம்போற்றி—மாகைலை
யாதியாய்ப் பூவி லரனா ருறைதலத்தின்
சோதியாய்த் தங்குஞ் சுடர்போற்றி—மாதிசைக
ளெட்டினையுங் காக்கு மிறைமையுடை யார்க்கருளுங்
கட்டழகி யுன்றன் கழல்போற்றி—நட்டமிடுந்
தேவனார் மெச்சத் திருத்தில்லை தன்னிலன்று
பாவகமா யாடும் பதம்போற்றி—மேவியுய
ராலங்காட் டாடு மரனார் மனங்களிக்கக்
கோலம் போட் டாடுங்குறிபோற்றி—கோலவரன்
பாதம் பிரியார்கள் பாகம் பிரியாளாம்
பாதம் பெரியாய் பதம்போற்றி—போதவுறுஞ்
சைவ முதலாஞ் சமயமறு நான்கினுளு
மெய்தி விளையாடு மெழில்போற்றி—யைவர்தொழி
லேற்றிடுஞ் சைவத் திலங்கிச் சிறப்பாகப்
போற்றிட நின்ற பொருள்போற்றி—யாற்றன்மிகு

மைம்பெரும் பூதத் ததனு ளுயிர்க்குயிராய்ப்
பம்பி யொளிக்கும் பதம்போற்றி—செம்பொருளார்
சாற்று மட்டமூர்த்திகளின் றன்னுட் செறிந்திலங்கி
யாற்ற லளிக்கு மருள்போற்றி—நோற்றவர்கள்
வேண்டாத வட்டசித்தி மேவிப்பணிந்தருளை
வேண்ட வளிக்கும் விறல்போற்றி—காண்டகு சீர்ப்
பாரதனி லொன்றுப் பலவாய் விளங்கியொளிர்
சீரணியும் பாதச் செயல்போற்றி—தாரணியிற்
காரணமுங் காரியமுங் காரியத்தி னுட்பொருளும்
பூரணமு மான பொருள்போற்றி—யாரணந்தேர்
சீரா ருருவாய்த் திகழு மருவுருவா
யோராருவா யோங்கு மொளிபோற்றி—யாரணியுஞ்
சங்கரனூர் மேவுந் தகைசே ரளகைநகர்
மங்கையுமை பாதமலர் போற்றி—சங்கைபெற
நன்றாகித் தீதாகி நானு விதமாகி
யன்றாகி யுண்டா மருள்போற்றி— பொன்றாச்
சரமசர மாகிச் சரீரி யசரீரித்
திரமதுவா யானசெயல் போற்றி—வரமுதவும்
பல்வேறு தெய்வப் பகுப்பா யுலகெங்கும்
புல்லிப் புணரும் பொருள் போற்றி—யல்லும்
பகலுமா யோங்கிப் பராவுவார் சென்ம
விகலைத் தொலைக்கு மிசைபோற்றி—சகலர்
வருபிரள யாகலர்விஞ் ஞான கலரா
மொருமூவர்க் குற்றவா வோங்கிப்—பெருவிறகிற்
றீயெனவும் பாலிற் செறியும் பிரையெனவு
மேய மணியொளியு மென்னவே—மேய
நிலையா யமர்ந்து நெறியளித்துக் காக்குந்
தலையாம் பதுமத்தாள் போற்றி—நிலையான
பல்கலையுந் தானாய்ப் படிப்பவருந் தானாக
மல்குந் திருத்தாள் வலம்போற்றி—பல்குமுயர்
மந்திரங்க டானாய் வழுத்துவருந் தானாகி
விந்தையொடு மேவும் விறல்போற்றி—யந்திநிறம்

பற்றுஞ் சிவனார்தம் பாகத் திலுமுள்ளும்
பற்றி விளங்கும் பதம்போற்றி—கொற்றமுறு
பானை வயிறும் பருங்கைக் குறுங்கணுடை
யானைமுகனை யருளாய்போற்றி—தேனைவிடும்
பொற்கடம்ப மாலை புனையு முருகோனை
நற்கலியிற் றந்த நலம்போற்றி—கற்குலையுந்
திண்டோ ளிலங்குந் திறல்வீர பத்திரனைப்
பண்டளித்த தெய்வப் பதம்போற்றி—மிண்டர்களைச் கநo
சாடுந் திறல்சேர் தனிவடுக நாதனையே
நாடி யளித்த நலம்போற்றி—பீடுயரும்
வெள்ளானை யேறும் விமலனுஞ் சாத்தாவை
வெள்ள வளித்த விறல்போற்றி—யள்ளிலைவேற்
கந்தனுக்குப் பின்னே கனிந்தநவ வீரர்களைத்
தந்தெமையே காத்த தகைப்போற்றி—நந்தலிலாப்
பல்கலையை நல்குமுயர் பாமகளை மன்பதைகள்
மல்க வளித்த வளம்போற்றி—யொல்குங்
கொடி யிடையா ளாமிரதிக் கொம்பினையே மாரன்
கடிபுரியத் தந்தகதி போற்றி—படியிலொளி
வீசி விளக்கும் விரிந்த கதிர்பரவுந்
தேசினையே தந்த திறம்போற்றி—மாசில்லா
வெண்கதிரை வீசி விளங்கி யிருளகற்றுந்
தண்கதிரைத் தந்த தகைபோற்றி—மண்குலவு
சீவர்வினைக் கேற்ற திறனளிக்குங் கோள்களையே
மேவ வளித்த விறல்போற்றி—யோவலிலா
நாளுடனே யைந்துறுப்பும் நாடியே மன்பதைகட்
காளு முறைக்கீந்த வருள் போற்றி—வானொளிசெய்
மாடகூடம் பலவு மன்னுஞ் சிறப்போங்கி
நாடவர்கண் மெச்சு நலமடைந்தே—யேடவிழுங் கசுo
கொந்துமலர்ச் சோலைக் கூட்டஞ் செறிந்திலகி
நந்தலிலாப் பல்போக நல்கியே—விந்தையொடு
மாமலரின் வாழுமுயர் மாமாத ரெண்மர்களுந்
தாமலர்ந்து வாழுந் தகைமைகொண்டு—பூமிசையே

பெற்றி சிறந்து பிரபலமா யோங்கிவளர்
வெற்றிநகர் தன்னில் விளக்கமுறும்—பொற்றளியி
லோணியா ருந்தவிசி னேற்றமுட னுருமன்ன
பூரணிநின் பாதப் புணைபோற்றி—தாரணியு
நின்கைப் படைபோற்றி நின்கருணைக் கண்போற்றி
பின்கைப் படையாத பேர்போற்றி—நின்கைக்கீழ்
மன்னிவள ரெங்கண் மனக்குறை யெலாமகற்றித்
துன்னி வளருஞ் சுடர்போற்றி—நன்னிதிய
மாகவெங்க ணற்றவத்தா லன்றுவந்து கோயில்கொண்ட
நாகமணி தெய்வநந் தாய்போற்றி—மேகலையான்
மின்னுந் திருவுருவ மேவும் பெருஞ்சோதி
மன்னு மன்னபூரணியா மான்போற்றி—யிந்நிலத்தின்
வற்றாத செல்வ வளத்தை யெமக்களித்து
நற்றுணைய தாவாய்நந் தாய்போற்றி—கொற்றமுறும்
வீரம் புகழ்கேண்மை மேன்மை யறம்பொறுமை
யீரமுந் தந்தா ளெந்தாய்போற்றி—நேரெமர்பாற்
பொல்லாக் கொலைகளவு பொய்காமங் கட்சூதா
மெல்லா மகற்றுவையெந் தாய்போற்றி—நல்லார்க
ணையமுட னெந்நாளும் நீணிலத்தில் வாழ்ந்திருக்கத்
தாயுன் னிணையடிநந் தாள்போற்றி—யாயுமறை
தேடரிய வீசன் சிவபெருமா னின்னடிப்பால்
வீடரிய பத்தி மிகுந்தோங்கிப்—பீடுதரு
நீற்றொளியான் மேனி நிரம்பி யொளிதிகழ
மாற்றுயர்ந்த பொன்னாய் மனமகிழ்ந்தே—யாற்றலுடன்
பந்த மகற்றிப் பரவியே வாழ்ந்திருக்கச்
சந்ததமு நின்னருளைத் தாபோற்றி—சிந்தைதனின்
மன்னு மகிழ்ச்சிதரு மக்கட்பே றெம்மவர்க்கே
நன்னயமாய்த் தந்தாணந் தாய்போற்றி—பின்னமுறும்
பல்கோடி சன்மப் பகையை யகற்றியரு
ணல்கி யருள்புரிநந் தாய்போற்றி—வெல்கரிய
பொல்லா வவமிருத்தைப் போக்கி நலவரத்தை
நல்கி யருள்புரிநந் தாய்போற்றி—யல்லறரு

பல்கோடி விக்கினமும் பாற்றியே நின்கிருபை
நல்கி யருள்புரிநந் தாய்போற்றி—பல்பிணியும்
போக்கிச் செழிப்புடனே பூவதனில் வாழ்ந்திருக்கப்
பாக்கியந் தந்தருட்கண் பார்போற்றி—தாக்கியிடும்
வல்லதொரு பாதகங்கள் வாராம லேயகற்றி
யல்ல றவிர்த்தா ளெம் மாய்போற்றி—பொல்லாத
செய்வினைகள் யாவுமெமைச் சேரா தகற்றியின்பத்
துய்வினையிற் சேர்த்தா ளொளிபோற்றி—பையகலும்
பாம்பாதி யின்விடங்கள் பற்றுமலே யுன்றன்
றேம்பதுமத் தாளளித்தாள் சீர்போற்றி—தேம்பறரும்
பொல்லாப் பசாசம் புகுந்தலைக்கா தேகிருபை
நல்கி யருள்புரிநந் தாய்போற்றி—வல்லமைசேர்
பூதங்க ளாலுமொரு பொல்லாங்கு வாராதே
யாதரவைத் தந்தாளெம் மாய்போற்றி—தீதளிக்குந்
தீநீராற் காற்றாலெத் தீங்குமே வாராமன்
மாநிலத்திற் காத்தருளம் மாபோற்றி—மாநிலத்தின்
மாற்றலர்க ளெம்மை வருத்தா வரந்தந்தே
யாற்ற லளித்தருளெம் மாய்போற்றி—யாற்றன்மிகு
துட்ட விலங்கினங்கள் தொட்டலைக்கா தேயெமக்குத்
திட்டமுட னின்கிருபை செய்போற்றி—யிட்டமுட
னேவருமே நேரா யிருந்து நினதுபணி
யாவலுடன் செய்ய வருள்போற்றி—மேவியுன்றன்
கோயிற் பணியுங் குலவுந் திருப்பணியும்
நேயமுற மற்று நிகழ்பணியு—மேயதொரு
மாத விழாவும் வருட விழாவுந்தேரு
மாதரவாய்ச் செய்ய வருள்போற்றி—போதமுறு
கல்வி யறிவுங் கருத்திற் றிகழ்ந்திடவே
மல்குமுயர் நின்கடைக்கண் வைபோற்றி—பல்கலையுங்
கற்றுச் சிறுர்கள் கவினவெமக் கென்றுங்
கொற்ற வரமளித்துக் கொள்போற்றி—கொற்றமிகு
செந்தமிழு மோங்கிச் சிறப்படைய வேவருக்கும்
பந்தவாந் தந்தருட்கண் பார்போற்றி—நந்தலிலாச்

சைவ சமயந் தழைத்தோங்கி யாங்களின்ப
மெய்த வருள்புரியெம் மாபோற்றி—கைதவரும்
நல்லவரா யாகி நலமடைய நின்கிருபை
நல்கி யருள்புரிநந் தாய்போற்றி—யல்லலின்றித்
திங்கண்மும் மாரி சிறந்து பொழிந்தோங்கி
யெங்குஞ் செழிக்கவரு ளேர்போற்றி—துங்கமுறத்
தாயேநீ யாட்சிசெயத் தானோங்கும் வெற்றிநகர்
மேயகுடி யாவு மிகுந்தோங்கி—நேயமுட
னோங்கு மலையி லுறுவிளக்கைப் போலோங்கிப்
பாங்குறவே நின்கடைக்கண் பார்போற்றி—தேங்கமழும்
பூங்குழலார் கற்பும் பொலிந்தேறு மாவினமும்
வாங்கு கடல்சூழுமிந்த மாநிலமும்—பாங்கா	௨00
மிரவி மதியு மினிதோங்கி வாழ
வரமுதவி யாளம்மா போற்றி—சிரமிசையே
போற்றியன்ன பூரணிநின் பூங்கமலப் பொற்பாதம்
போற்றி யருட் கட்கமலப்போது.	௨0௨

முற்றும்.

௨

சிவமயம்.

ஸ்ரீ அன்னபூரணியம்மன் றுணை.

நான்காவது

அடிமடக்கு அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

காப்பு வெண்பா.

சீரண்ணும் வெற்றித் திருநகர மேவிவளர்
தாரண்ணும் பூரணியா டன்னடிக்குச்—சாரு
மடிக்கடியா ரும்பதிகம் மல்லலுறக் காக்குங்
கடக்கரியின் செம்பொற் கழல்.

## நூல்

தனத்தானை மகம்வருமுத் தனத்தானைத் தமிழ்மொழியைத்
 தாங்கிக் காத்த
வனத்தானை யொளிர்சோதி வனத்தானை மனத்துளன்பாய்
 வணங்கு வோர்கட்
கினத்தானை மூவர்சொற்பா வினத்தானை யிருமையினு
 மெம்மைக் காக்கு
மனத்தானை யவனியின்வா மனத்தானை யனுதினமும்
 வணங்கி வாழ்வாம்.

சடையானை யெமைக்காக்கச் சடையானைத் தனையடைந்தோர்
 கருவிற் சாரப்
படையானை மூவிலைவேற் படையானைப் பன்னிருகைப்
 பால னருந்
துடையானை நல்லவரைத் துடையானைத் துடியெனுமோர்
 சொல்லு நொய்ய
விடையானை யெவற்றினுக்கு மிடையானை யெப்போது
 மிறைஞ்சி வாழ்வாம். ௨

வருவானை யென்மனத்தி வருவானை வணங்கிடுவோர்
 மகிழ வின்பந்
தருவானை யினியகற்ப தருவானைத் தனையாய்ந்தோன்
 தம்பால் வந்த
மருவானைக் குழலணியு மருவானை வெற்றிநகர்
 வளரத் தந்த
திருவானை நினைக்குமுன்னெ திருவானை யடிவணங்கிச்
 சிறந்து வாழ்வாம். ௩

தரித்தானை யன்பரையா தரித்தானை முப்புரமுந்
 தழலி னீறுச்
சிரித்தானை யென்வினையச் சிரித்தானை யருட்சூலாற்
 செகமி யாவும்
விரித்தானை நடந்தனிற்கை விரித்தானை மெய்யடியார்
 வினையை வேறுத்
திரித்தானை மணங்கமழ்பா திரித்தானை யுடையானைத்
 தேறி வாழ்வாம்.

அணியானை மனங்கனியார்க் கணியானை யடியேனை
யவனி சாரப்
பணியானை வெவ்வரவப் பணியானைப் பரமேசர்
பரவு மூட
றணியானைக் கருணைமிகுந் தணியானை வழுதிபிறை
தரித்த நிம்பக்
கணியானை யொளிசெயுமக் கணியானைக் கழல்பரவிக்
களித்து வாழ்வாம். ரு

நகத்தானை யொளிர்கோக னகத்தானை யுடையானை
நங்கள் பாண்டி
மகத்தானை மூவருந்தேர் மகத்தானை மனமிறந்து
வாழ்த்து வோர்தம்
மகத்தானை யேழையர்தா யகத்தானை யெமதிறைவர்க்
காகு மின்பச்
சுகத்தானை மறைமொழியஞ் சுகத்தானை யனுதினமுந்
துதித்து வாழ்வாம். சு

வரத்தானைச் சங்கமதா வரத்தானைத் தமிழ்வளரு
மதுரை யாணர்ப்
புரத்தானை யோவிடுநா புரத்தானை யனவரதம்
புகலும் வேத
சிரத்தானைத் திருவடியென் சிரத்தானைத் தீனர்களைச்
சிறக்கச் சேர்க்குங்
கரத்தானை வெற்றிநக ரத்தானைக் கழல்பரவிக்
களித்து வாழ்வாம். எ

மலையானை யெமைக்காக்க மலையானை மனங்கனியார்
மதிக்கு மிக்க
தொலையானை பிறிதியின்மேற் றொலையானை யடிபரவுந்
தொண்ட ரன்பின்
வலையானை யரன்சடைமே லலையானை மகிதலத்தின்
மலிந்து மன்னுங்
கலையானை யணிசெயுமே கலையானைத் தினமபரவிக்
கருதி வாழ்வாம்.

உதியானை விளையாட்டா லுதித்தானைச் சிவத்தையன்றி
யொன்றை நெஞ்சின்
மதியானை யடியவரை மதித்தானை வணங்காதார்
மனத்திற் பாதம்
பதியானை யேழைநெஞ்சிற் பதித்தானைச் சீலர்களைப்
பாரிற் றேன்ற
விதியானை யல்லாரை விதித்தானை யனுதினமு
மேவி வாழ்வாம்.
பாராளக் கொடியர்களைப் பாராளத் தினம்பரவிப்
பணியும் வெற்றி
யூரானை விடையிலன்றி யூரானை யுலகமெலா
முவந்து போற்றும்
பேரானை யணிகானப் பேரானைப் பெரியானைப்
பிறப்போர் முன்றில்
வாரானை முலையணிந்த வாரானைப் பணிந்துதினம்
வணங்கி வாழ்வாம் ௧0
தாரணியைப் புரந்தகொன்றைத் தாரணியை யுடையானைத்
தகைமை சாலு
நாரணியை யடியர்துதி நாரணியை யுமையானை
நாடும் லோக
காரணியைச் சோலைசெறி காரணியை யுடையவெற்றி
நகரைக் காக்கும்
பூரணியை வளருமன்ன பூரணியை யனுதினமும்
போற்றி வாழ்வாம். ௧௧

முற்றும்.

சிவமயம்.

அன்னபூரணியம்மன் றுணை.

அறுசீரடி யாசிரிய விருத்தம ஒருபா வொரு பஃது.

காப்பு வெண்பா.

தாருலவு வெற்றிநகர் தன்னிலமர்ந் தோங்குமெங்கள்
ஏருலவு பாதத் திறையவிக்குப்—பாருலவு
மோரா பா வொருபஃது மொப்பமுடிந் தேற்றமொடு
சீர்பெறவே யானையருள் செய்.

## நூல்

மன்றினுக்கு ணடமாடு மாமணியி னிடப்பாக
மருவி வாழுங்
கன்றினுக்கு நினைந்துவரும் பாலூட்டுங் கருணையினுள்
கயிலை வெள்ளிக்
குன்றினுக்குண் மனையறஞ்செய் துலகமெலாம் அறம்பெருக்குங்
குணத்தாள் பத்தி
யொன்றினுக்கு ளகப்படுவா ளன்னபூ ரணித்தாயை
யுன்னி வாழ்வாம். க

வழுதிசெயும் பெருமகத்தில் வந்துதித்த முத்தனத்தாள்
மன்னுங் கோல்கொண்
டெழுதரிய திருவுருவா ளிலகுமணி முடியுடையா
ளிகலி னந்தி
தொழுதகலப் பெருதுவென்ருள் துதிக்குமறை முடியினின்ருள்
துழனி வண்டார்ந்
தழுதகலும் மலர்க்குழலா ளன்னபூ ரணித்தாயை
யுன்னி வாழ்வாம். உ

சந்தமுறுந் திருமணத்தாள் தனதரசை யிறைக்களித்தாள்
ததும்பித் தேஞர்
கந்தமுறும் பதமலர்த்தா ளெனக்களித்தாள் சந்ததமுங்
கனன் றென்னேடு

தொந்தமுறும் பெருவினையி னுருவழித்தாள் தேவர்தினந்
தொழும் பாதத்தாள்
பந்தமுறுங் கனதனத்தா ளன்னபூ ரணித்தாயைப்
பணிந்து வாழ்வாம். ௩

துட்டமதி யவுணர்களின் குலகாலி மூவிலைவேற்
சூலி நீலி
வட்டமதி வதனத்தி வாரணியும் பெருந்தனத்தி
மவுன யோகர்
கிட்டமதி விரைந்தளித்துக் கிருபைசெயு மம்பரத்தி
கிளர்ந்த பாதி
பட்டமதி நுதலழகி யன்னபூ ரணித்தாயைப்
பணிந்து வாழ்வாம்.

கச்சிதனிற் றவமியற்றிக் கம்பைநதிப் பெரும் பெருக்காற்
கரைந்து சிந்தை
யச்சிதன தணியகரத் தணைத்துமுலைக் குறியும்வளைக்
குறியு மன்பா
யெச்சிறனை மிசைந்தசிவன் றிருவுருவி லிருத்திவைத்த
விறைவி மிக்க
வுச்சிதமா மிமயமலைப் புதல்வியன்ன பூரணியை
யுன்னி வாழ்வாம். ௫

நடமாடுஞ் செழும்பதத்தி நம்பிடுவோர்க் கருள்புரியு
நலந்தரு [illegible]
குடமாடுஞ் சிற்றிடைச்சி குமரவே டனைப்பயந்த
குமரி யஞ்சி
விடமாடு மருள்விழிச்சி விரதியர்கள் துதிமொழிச்சி
வேணி நம்ப
ரிடமாடும் பசுங்கொடிச்சி யன்னபூ ரணிப்பாத
மிறைஞ்சி வாழ்வாம்.

புரந்தரனை மறையவனை நெடியவனை யுருத்திரனைப்
புவனத் தென்று
நிரந்தரமாய்த் தொழிலியற்றக் கருணையுட னருள்புரியு
நிமலி யன்பா

யிரந்தரனை சுறுவர்தயின மகளெனும்மோர் மாற்றமறைந்
    தேக வெற்கு
வரந்தரவே வேண்டுமெனப் பெற்றவன்ன பூரணியை
    வணங்கி வாழ்வாம்.
கூடலிலன் றரியமறை முடிதேடு முடியின்மண்ணைக்
    கூவு மன்பர்
பாடலிலன் றிடுபட்டுச் சுமந்துசிவந் தனுத்தசொக்கர்
    பரவிக் கூடு
மூடலிலன் றினியமலர்ச் சீரடியா லோச்சவர
    னுவந்து நோக்கு
நாடலிலன் றிடுபட்டுத் தழுவுமன்ன பூரணியை
    நயந்து வாழ்வாம்.
மட்டொழுகுந் துணர்க்கொந்தார் மாலைமுடிக் குழலிகுழை
    மன்னுமோர் வாள்
விட்டொழுகுங் கதிர்நிலவு பரவுமெழில் வதனத்தி
    விரியு நெற்றிப்
பொட்டழகி யண்டமெலாந் தருமகட்டுப் பொலிவழகி
    புகல வொண்ணுக்
கட்டழகி யெமைக்காக்கு மன்னபூ ரணித்தாயைக்
    கருதி வாழ்வாம்.
பத்திதரும் பதத்தானைப் பவமகற்றுங் குணத்தானைப்
    பரவு வோர்க்கு
முத்திதரு மனத்தானை முளரிநிகர் கரத்தானை
    முன்னு வோர்க்காஞ்
சத்திதருந் திறத்தானைத் தண்ணளிசேர் வரததானைச்
    சார்ந்தோர் வேண்டுஞ்
சித்திதரு மினத்தானைத் தேவியன்ன பூரணியைச்
    செப்பி வாழ்வாம்.

முற்றும்.

சிவமயம்.

ஸ்ரீ அன்னபூரணியம்மன் றுணை.

ஆறவது

# இருபா இருபஃது.

## காப்பு வெண்பா.

பண்பரவு வெற்றிநகர்ப் பாவையன்ன பூரணியாள்
தண்பரவு சீரடியிற் ருனணியு—மெண்பரவ
மன்னு மிருபா விருபஃ தினுக்கருளும்
பன்னுகரி செம்பொற் பதம்.



## நூல்

### கோச்சகம்.

மின்னுரும் பைங்கிரியின் மேவிமலர் காந்தளெனப்
பொன்னுருஞ் செங்கரத்தம் போதன்ன பூரணியாள்
கொன்னுருஞ் சூலமதைக் கொண்டுசிம்ம வாகனத்தின்
இன்னுருஞ் செம்பதுமத் தாள்வைத் திலங்குவளே.

### கலி விருத்தம்.

இலங்கு மாரந் துயலு மெழின்முலை
யலங்க லாரு முடியன்ன பூரணி
விலங்க லார்மனை மேனை வளர்த்தவள்
தலங்க ளாறினிற் சார்ந்து நடிப்பளே.

### கோச்சகம்.

நடிப்பார் மனத்திலன்பு நண்ணப் புகழினையே
படிப்பா ரகத்தினிலே பற்றியுறு மம்மையவண்
மிடிப்பாலர் துன்பகற்றி மேவுமன்ன பூரணிதன்
னடிப்பா லமர்ந்திருந்தா லந்தகனுக் கென்ருெழிலே

### கலி விருத்தம்.

என்பு நெக்குரு கத்தொழு தேத்துவோ
ரன்பு புக்கங் கமரன்ன பூரணி
வன்பு புக்க மலப்பிணி மாற்றியே
யின்பு புக்கு மெழிற்பத மீவளே.

### கோச்சகம்.

ஈகை சிறிது மில்லா ரில்லறஞ் செயுமுறைபோ
லோகை சிறிது மில்லா ரொண்பொருளைப் பற்றுவரோ
வாகை செறியுமடி மாதன்ன பூரணியெற்
காகை செறியு மருள்பெறின்வே றென்குறையே.

### கலி விருத்தம்.

குறைவி லாநிறை வாகிய கோலத்தாண்
மறையு லாவிய மாதன்ன பூரணி
நிறையு லாவிய நீடருள் பெற்றிடின்
கறையு லாவுங் கருப்புக மில்லையே.

### கோச்சகம்.

இல்லையோ வுண்டோ வெனுமிடையும் நூலிடையாள்
அல்லையோ கொண்மூ வதனையும்வெல் லீர்ங்குழலாள்
சொல்லையோ ரன்பர் துதிக்குமன்ன பூரணியாள்
முல்லையோ வென்னு முறுவலா ளென்றுணையே.

### கலி விருத்தம்.

துணை முலைசுமந் தொல்கிய சோதியா
ளிணை முலையெனு மேர்செ யெயிற்றினள்
புணை நிலையடிப் போதன்ன பூரணி
யணை நிலையெனக் காரு மில்லையே.

### கோச்சகம்.

இல்லையே நந்தி யிடருழந்து மான்மிகுந்து
கல்லையே தின்ற கணக்கதுவாய் வாடிடவோ
வல்லையே வென்றளித்த வம்மையன்ன பூரணிப்பேர்ச்
சொல்லையே சொல்லிற் றுயர தணுகிடுமோ.

### கலி விருத்தம்.

அணுவு மாகிநல் லண்டமு மாகியே
நணுகி மேவு நகையன்ன பூரணி
கணுவு லாவுங் கரும்பின் சுவையென
வணுகி யுண்டங் கமர்ந்து சுகிப்பனே.

### கோச்சகம்.

சுகமொழியுஞ் செவ்வாய்ச் சுடரொளியும் பொங்கிடவென்
னகமொழியா தின்பா யமருமன்ன பூரணியாள்
தகமொழியைத் தந்துமலர்த் தாளென் சிரஞ்சூட்டி
யிகமொழிய மேலு மிரங்கியருள் செய்குவளே. சு

### கலி விருத்தம்.

வள்ளத் தாமரை வாய்மலர் வந்திடுங்
கொள்ளைத் தேனைக் குழகர்க் களிப்பவ
ளுள்ளக் கோயி லுறையன்ன பூரணி
கள்ளத் தாமரைக் காறுணையா மரோ. 6

### கோச்சகம்.

ஆமாறு சந்ததமு மன்புநிலை நின்றிடுவோர்
தாமாறு சார்ந்திடவே தண்கருணை செய்திடுவாள்
பூமாலை கொண்டிலங்கும் பூவையன்ன பூரணியென்
பாமாலை கொண்டென் பணிபூர்த்தி செய்வாளே. எ

### கலி விருத்தம்.

வா ளிரங்கும் வடுவகிர் மால்விழித்
தா ளிரங்குஞ் சிலம்பொலி சார்தரத்
தோ ளிலங்குஞ் சுடரன்ன பூரணி
நா ளிலங்கும் படிவந்து நண்ணுமே. 7

### கோச்சகம்.

நண்ணிடுவோ ரோதுமறை நாதவடி வாயிலங்கி
யெண்ணிடுவோர் காண வெதிரேற்று நின்றிடுமான்
கண்ணிடுவோர் காட்சி களிசெயன்ன பூரணிதான்
பண்ணிடுவோர் பாடும் பசுந்தமிழுக் கின்புறுமே. அ

### கலி விருத்தம்.

இன்ப மேனி யெழில்செயும் பெற்றியா
ரன்பின் மேவி யருளன்ன பூரணி
வன்பி னூடு மதியுளர் காண்கிலா
வென்பின் மாலை யிலங்கிறை தேவியே. 8

### கோச்சகம்.

தேவிபர மேசரனார் செம்பவள மேனியுள்ளா
ராவியர வந்திகழு மம்பொன்மணி மேகலையா
ளோவியருந் தீட்டவொணா தோங்குமன்ன பூரணிதாண்
மேவி யிருந்திடுவோர் வேறுபவங் காண்குவரோ. ௯

### கலி விருத்தம்.

காண லாவதோர் காட்சிப் பொருளதாம்
பூண லாவதோர் மாதன்ன பூரணி
நாண லாவதோர் நற்பிறப் பெய்தினோந்
தோண லாவதோர் சுந்தரி காண்மினே. ௯

### கோச்சகம்.

மின்பரவு மேனி வெயில்விரிக்கு மங்கணனா
ரின்பரவு பாதி யிடமளிக்கத் தானமர்வாள்
அன்பரவர் மூவ ரரும்பாட்டி னுக்குருகுந்
தென்பரவு மாலை திகழுமன்ன பூரணியே. ௧0

### கலி விருத்தம்.

பூரணி நற் புவனங்க ளண்டத்தின்
காரணி யன்ன பூரணி காமரு
நாரணி பதம் நாளுந் தலைக்கொள்வேன்
தாரணி முலை யாடனைச் சார்மினே. 10

முற்றும்.

சிவமயம்.

ஸ்ரீ அன்னபூரணியம்மன் றுணை.

ஏழாவது

## முப்பா முப்பஃது

### காப்பு—வெண்பா.

கலைதுன்னு வெற்றிநகர் காக்கவள ரெங்கள்
நிலையன்ன பூரணியா நேசி—முலைதுன்னு
முப்பாமுப் பஃதுரைக்க முன்னின் றருள்புரியுங்
கற்பக விநாயனற் கால்.

## நூல்.

### வெண்பா.

திருவாரும் வெற்றிநகர்த் தேவியே யுன்றன்
குருவாரும் பொற்பாதங் கொண்டேம்—மருவாருந்
தாமங் கருங்குழலி தாயன்ன பூரணிநின்
னேமந்தருங் கலையிந் நாள்.

### கலித்துறை.

நாண்மலர்ப் பாதந் தனைத்தலை சூடினம் நங்களினம்
வேண்மலர்ப் பாயம்பு பட்டுழ லாமல் விறலளித்து
வாண்மலர்ப் பாய திருமுக நோக்க மலர்ந்தருளிப்
பூண்மலர்ப் பாய வுருக்காட்டி யாளன்ன பூரணியே.

### எழுசீர்க்கழி நெடில் விருத்தம்.

பூங்கொடி யொன்றிற் பலமலர் மலரும்
பொற்பெனத் திருவுருப் பொலிந்து
தாங்கொடி தகற்றி யெமைத்தினங் காக்குஞ்
சங்கரி யன்னபூ ரணிபாற்
பாங்கொடு மியற்றும் பணிபல நெறியின்
படிசெயும் பத்திமை யளிப்பாள்
தேங்கொடு மழலை மொழிபயில் குதலைச்
செல்வியே ரணிகனங் குழையே.

### வெண்பா.

குழையணியு மீசன் கொழுங்கரத்தி லென்றும்
உழையணியு மீச னுவந்தே—தழையணியுஞ்
சிற்றிடைச்சி தேவியன்ன பூரணியாள் சீறடியைப்
பற்றிடச் செய்வாளென் பணி.

### கலித்துறை.

பணியாருங் கங்கணச் செங்கரத் தாளம் பசுங்கொடியாள்
அணியாருஞ் சொக்கருக் காவியன் னளன்ன பூரணிமான்
எணியாரும் போற்றிடி லக்கணங் கூவி யெதிர்வருவாள்
தணியாருங் கட்செறியெந்தாய் பராசத்தி சங்கரியே.

## எழுசீர்க்கழி நெடில் விருத்தம்.

சங்கரி பொருப்பிற் றவழ்ந்தினி தாடுந்
தையனல் லங்கயற் கண்ணி
தங்கரி பணியுந் தனியறக் கொடிநந்
தாணுவுக் கினித்திடுந் தேவி
அங்கரி முகனை யறுமுகக் கனியை
யளித்திடு மன்னபூ ரணியாள்
சிங்கரி சுமக்குந் தவிசினிற் சிறக்குந்
தேவிகல் யாணசுந் தரியே.

## வெண்பா.

சுந்தரஞ்சேர் கும்பத் துணைமுலையாள் தென்மதுரைச்
சுந்தரன்சேர் பொன்பொலியுந் தோளினாள்—மந்திரஞ்சேர்
தாயன்ன பூரணியாள் தண்டா மரைப்பதத்திற்
சேயென்னக் கொண்டருள்வாள் சீர்.

## கலித்துறை.

சீரணி யாரும் பசுங்கிளி நான்மறை தேடரிய
தாரணி யம்பொற் றனமலை தாங்கித் தளருமிடை
வாரணி மேகலை யாரு மெழிற்கன்னி மான்விழியாள்
நாரணி யெம்மன்ன பூரணியே யெங்க ணாயகமே.

## எழுசீர்க்கழி நெடில் விருத்தம்.

நாயகஞ் சிறக்கு மேருவில் லோனை
நம்பர மேசனைத் தழுவுந்
தாயக மான மரகத மேனித்
தையலா ளன்னபூ ரணியாண்
மேயக மான வென்னுளக் கோயில்
வீற்றிருந் தருள்சுரந் தினிய
சேயக மான திருவடி மலரென்
சிரத்தினிற் சூட்டுவள் சிறந்தே.

## வெண்பா.

சிறக்கும் பசுந்தோகை செம்பவள வாயாள்
அறக்கும் பரிந்திட்டு மம்மை—நிறக்கும்
பெருஞ்சோதி யெம்மன்ன பூரணிமான் பேணித்
தருஞ்சோதி தாண்மலரைத் தான்.

தானம் பொழியு மொருகோட்டு வாரணந் தன்னையருள்
கானம் பொழியுஞ் சுரிகுழற் றோகை கவின்தெழுந்த
வானம் பொழியு மழையென்ன மன்னருண் மாரிபெய்யும்
ஞானம் பொழியுமெந் தாயன்ன பூரணி நற்கனியே.

## எழுசீர்க்கழி நெடில் விருத்தம்

நற்கனி மூன்று வருக்கமும் பிழிந்து
நறும்பசும் பாலுநன் னெய்யுங்
கற்கண்டு தேனுங் கலந்தடும் பாகின்
கனிந்தினித் திடுமமு தன்னாள்
எற்கனி யான வன்னபூ ரணிமா
னெழுதருந் தனிவடி வுடையாள்
பொற்கனி பாதாம் புயத்தினைச் சிரத்திற்
புல்லுவன் புந்தியின் மகிழ்ந்தே.

## வெண்பா

மகிழ்சிறந்த சோதி மலர்முகத்தா ளுள்ளம்
நெகிழ்சிறந்த நேயமுட னின்றாள்—புகழுந்
திருநாமத் தாயன்ன பூரணியென் சென்னி
தருநாம மோங்கிடும்நற் றாள்.

## கலித்துறை

தாளினைத் தேடித் தவிக்கவொட் டாதெதிர் சார்ந்திடுவாள்
வேளினை வீயும் படிக்கு விழித்தவன் மேவுமெந்தாய்
வாளினை நேரும் விழியன்ன பூரணி மங்கையிந்த
நாளினை நன்றென வந்தே யருள்செய்வ ணாங்களுக்கே.

## எழுசீர்க்கழி நெடில் விருத்தம்

நங்கையம் புன்னைக் கடற்றுறைத் தலைவ
னனிகனி மகவென வளர்ந்த
மங்கையெந் தேவி யன்ன பூரணியாள்
வருபவந் துடைத்தினி தருளிச்
செங்கையாற் றூங்கித் திருவடி மலரென்
சிரமிசைச் சூட்டுவண் மாயன்
றங்கையோ ரரிய தமனியக் குன்றைத்
தழுவிடு மினிய பைங்கொடியே.

## வெண்பா

கொடியாரை வாட்டன்ன பூரணிநங் கோதை
பிடியாருந தேயுமிடைப் பேதை—யடியார்
முடிதோயும் பாத முளரியடி யேனின்
முடிதோயச் சூட்டிடுவாண் முன்.

## கலித்துறை

முன்னிற்குந் தீய வினையாவு மோடி முதுகுதந்து
பின்னிற்கு மாறளி செய்யன்ன பூரணி பேணுகழ
~-- வாடிக்கிடைக்காமற் றேமபுந தகையுடையா
ரென்னிற்கு வந்துபணிநதான ல்லாற்றை யியம்புவனே.

## எழுசீர்க்கழி நெடில் விருத்தம்

இயம்பல முழங்க வரம்பையர் நடிக்க
வெழின்மிகு முனிவர ரமரர்
வயம்பல முழங்கும் வாழ்த்தொலி யெடுப்ப
மண்ணவ ரேததி நின்றிரங்கக்
கயம்பல முழங்குஞ் சோதி மாவனத்தின்
கதிர்விடு கோயிலின் றவிசின்
நயம்பல முழங்க வினிதெழுந் தருளும்
நாயகி யன்னபூ ரணியே.

### வெண்பா.

அணியாரு மேனி யழகுடையா ணிம்பக்
கணியாருஞ் சோதிமுடிக் கன்னி—பணியார்
புதுக்கங் கணத்தன்ன பூர    ன் பாத
மதுக்கங் கணவருளி யாள்.

### கலித்துறை.

ஆளும் பசுங்கொடி காஞ்சிப்பதியி லறமதனை
நாளும் வளர்த்திட்ட மாதன்னபூரணி நங்கள்வினை
மாளும் படிக்கு வரமளித் தாண்டு மதி விளக்கிக்
கோளு ம்பணியக் கிருபைசெய் தேயெமைக் கொள்ளுவளே.

### எழுசீர்க்கழி நெடில் விருத்தம்.

கொள்ளைய தாகக் கதிர்விடு தரளங்
கொங்கையி லசைந்திடை துவள
வெள்ளை நன்னீற்றி னுதலொளி செய்ய
மேனி பைங்கதி ரழுகெறிப்ப
வள்ளையார் செவியிற் குழைகனிந் தாட
மாதன்ன பூரணி கொலுவிற்
பிள்ளையா யமர்ந்த திருவிளை யாட்டைப்
பேசிடிற் பிறப் பொழிந் திடுமே.

### வெண்பா.

பிறப்பிறப்புக் கஞ்சிப் பேதை யடியேனெம்
மறப்பிறப்புக் கானவழி தேடி—யறப்பான்மை
மன்னுமன்ன பூரணியின் மாணடியி லண்டினே
னின்னுமென்ன வோர்குறையின் றே.

### கலித்துறை.

இன்றே வருகுவண் மாதன்ன பூரணி யேழையென்முன்
னின்றே தனதெழி லாருருக்காட்டி நினைத்தவர
மொன்றே திருவடி சேர்ந்தினி தாக வுவந்தருளி
யென்றேனும் நீங்கி யிராப்பெரு நல்வர மீந்தனளே.

## எழுசீர்க்கழி நெடில் விருத்தம்.

தனமது குலுங்கக் குழைபுரண் டாடத்
தண்கயல் விழியரு ளொழுக
வினமணி கோத்த மேகலை புலம்ப
விலங்குறா புரமது சிலம்பக்
கனமது நலியுஞ் சுரிகுழ லசையக்
கதிர்விடு மரங்கினி லாடெம்
மினமது வான வன்ன பூரணிநின்
னெழிலினைப் புகலவு மெளிதோ.

## வெண்பா.

எளியார்க்கு முன்னின் றினிதருளுந் தேவி
யளியார்க்கும் பைங்குழலெம் மம்மை—களியார்க்கும்
வண்ண மெமக்கருளும் மாதன்ன பூரணியின்
றண்ணம் பதமென் றலை.

## கலித்துறை.

தலைமாலைசூடும் பரமேசர்தோளைத் தழுவு மெந்தாய்
முலைமாலையாடு மெழிலாரு மங்கை முழு துணர்ந்தோர்
கலைமாலை சூடன்ன பூரணி நங்களைக் காத்திடுவா
ளிலைமாலை யாரளி பண்பாடி யாடிட வித்தகியே.

## எழுசீர்க்கழி நெடில் விருத்தம்.

ததியினி லெதிரில் வருமெம திறைவி
தாயன்ன பூரணி கயற்கண்
ணிதியினிற் சிறந்த பெருநிதி யெமக்கு
நிறைந்திடும் வாழ்வளித் திடுமான்
பதியினிற் பெரிய மதுரையம் பதியிற்
பரமர்க்குப் புவிமுடி சூடி
விதியினின் முறைசெய் துலகினை யோம்பும்
வித்தகி யென்றலை மணியே.

### வெண்பா.

மணிகொழிக்கும் வையை வளநாட்டை யாண்ட
வணிகொழிக்கு மங்கயற்க ணம்மை-பிணியொழிக்குந்
தாயன்ன பூரணியின் றாடலைமேற் சூடினா
னேயென்ன நெஞ்சே நுவல்.

### கலித்துறை.

நுவலருஞ் சோதி மடவன்ன மாதரும் நொய்யிடையாள்
தவலருஞ் செல்வ மெமக்களித் தாளினிச் சஞ்சலமேன்
கவலருஞ் சாதன மீயன்ன பூரணி கான்மலரை
யவலருஞ் சீரணி யாயென் றலைமிசை யாற்றுவனே.

### எழுசீர்க்கழி நெடில் விருத்தம்.

ஆற்றொடு மதிய மரவறு கெருக்கு
மணிதும்பை கரந்தையங் கொன்றை
யேற்றிடு சடையெம் மிறைவனைத் தழுவு
மெம்மை நல் லன்னபூ ரணிமான்
காற்றொடு புவியெட் டாகிய வுருவிற்
கலந்திருந் தவனியைப் புரக்குந்
தேற்றிடு கருணை விழிதழை யம்மை
செழும்பத மெனக்குயர் திருவே. 10

முற்றும்.

---

உ

சிவமயம்.

அன்னபூரணியம்மன் துணை.

எட்டாவது

## நாற்பா நாற்பஃது.

### காப்பு—வெண்பா.

தேனன்ன செஞ்சொற் சிவைவெற்றி யூர்வாழும்
மானன்ன பூரணியாள் வண்பதத்திற்—றானண்ணா
நாற்பாநாற் பஃதுரைக்க ஞானமத வாரணத்தி
னேற்பாதம் நெஞ்சே நுவல்.

## வெண்பா.

அஞ்சரணச் செஞ்சொன்மொழி யன்னமே யேழையுளப்
பஞ்சரத்தில் வாழும் பசுங்கிளியே—விஞ்சுமறை
தேடுமன்ன பூரணியே தேவாதி தேவனுட
னாடுமன்ன நாரணியே யாள். க

ஐந்துதொழிற் காதார மானவளே நின்னடியின்
மைந்தளித்தே காத்தருளு மங்கையே—நொந்திடற்கு
விட்டிடா தேயருள்வை மின்னன்ன பூரணிநற்
பட்டிடையா ளேகடைக்கண் பார். உ

நாடுமெளி யார்க்கெளிய நாயகியே தென்னனவே
பாடுமெளி யார்க்குமெழிற் பைங்குழலி—கூடுமெளி
தந்தெம்மை யாதரித்தே தாயன்ன பூரணிநின்
கந்தமலர்ப் பாதமதிற் கா. ங

காட்சிக் கடங்காக் கவினார் மரகதமேய்
மாட்சிக் கொழுந்தே மறைமுதல்வி—தாட்சிற்
சுகமதனைத் தாவன்ன பூரணிநற் றேகா
யிகமதனிற் சிந்தைமகிழ்ந் தே.

வேண்டா விழுச்செல்வம் வேண்டினோர்க் கேயுரிமை
பூண்டாய்நீ யெற்குப் புகலேது—வீண்டேழை
யென்முகத்தைப் பார்த்தே யெழிலன்ன பூரணிநின்
றன்முகத்தைக் காட்டியருள் தா. ரு

எல்லார்க்குந் தாயா யிருப்பவளே கண்டத்தி
லல்லார்க்குந் தேவ னருந்துணைவி—நல்லார்க்குத்
தானே யெதிரில்வருந் தாயன்ன பூரணிநன்
மானே யெனக்கிரங்கி வா.

தாயேசேய் மீதில்வன்மந் தானுடு மாகொடிய
நாயேனைக் கைவிடலும் ஞாயமா—நீயேனோ
பெற்றா யெனையேதான் பேரன்ன பூரணிநின்
பொற்றாளே யெற்குப் புகல். எ

ஊரா ருனைச்சிரிப்பா ருத்தமியே யேழைமுகம்
பாராயே னிற்குப் பழிப்பாதும்—யாரேதா
னெற்குரியா ரேனறியா யெம்மையன்ன பூரணிநின்
பொற்கழலே நாயேன் புகல். அ

பெற்றவரே கைவிட்டாற் பின்னையெவ ராதரிப்பார்
ஏற்றுமிதை யுன்னுத தன்மையென்னே—நெற்றிவிழி
நாதனுர்க் குற்றதொரு நங்கையன்ன பூரணிநின்
பாதமேற் சாரவெனைப் பார். ௯
சித்திரத்தி லோவியமே தேடிவரு மெய்யன்பர்
பத்தியதிற் சிக்கியுறும் பாவையே—நத்தியுறு
மேழைக் கிரங்கியரு ளெம்மன்ன பூரணியென்
னூழைப் புறங்கொடுக்க வோது. ௧0

வேறு—கலித்துறை.

உருக்கும் பசும்பொன்னி னேவிய மேயுனை யுன்னுநெஞ்சம்
உருக்கும் பிறங்கன்ன பூரணி யேவரு மூழிமுத
லிருக்கும் பராவிடு மென்னம்மை யுன்பத மேழைநெஞ்சு
ளிருக்கும் பொழுதெனை யென்செய்வன் கூற்றுவ னீதுரையே.
படிக்கும் பெருமபுகழ் நின்புக ழேகடல் பற்றிவளை
படிக்கும் பரந்திடு வானிற்குந் தாயுன்றன் பாதமலர்
முடிக்குந் தலைதனி லெம்மன்னபூரணி மூவுலகு
முடிக்கும் பொழுதினு மேயடி யேனிது மெய்ம்மொழியே. ௧௨
தேடுந் திருமறைக் கூட்டங்க ளின்னுநின் சீறடியைத்
தேடும் படிக்கன்றி யேழைக் கருள்செயுந் தேவியடி
கூடும் படிக்கரு ளெம்மன்ன பூரணி கூற்றுவன்பின்
கூடும் படிக்கு விடாதே யிறைமகிழ் கோமளமே. ௧௩
விண்டோடு வேதனுங் காணுத சேவடி மேவினதை
விண்டோடும் பாதக மீதறி யாதவர் வீணர்களே
கண்டோடு சேர்மொழி மாதன்ன பூரணி காலனெனைக்
கண்டோடு மாறு வரந்தரு வாய்வளர் கற்பகமே. ௧௪
எட்டும் பெருங்கொம்பிற் றேனென்ன வேழை யெதிரினுறு
மெட்டுங் கடந்த வடிவான வேந்திழை யீர்ங்குழலின்
மட்டும்பொழியு மெழிலன்ன பூரணி மாதவள்கான்
மட்டுங் கிடைத்திடில் வேறென்ன வேண்டுமிம் மாநிலத்தே. ௧௫
அஞ்சுஞ் செறிந்து வளரும் பராசததி யம்மையென்னை
யஞ்சுந் திறன்செறிப் பாளோ விலையிலை யையனுமே
கெஞ்சும் பிணக்கினைக் காட்டன்ன பூரணி கேட்டுநமன்
கெஞ்சுந் திறன்றந்து காப்பா ளறிகுவன் கேண்மையிதே. ௧௬

பண்பாடும் வேதக் குழவிக்குப் பாறந்த பாவைகொடும்
பண்பாடுந் தீயரைக் கோபித்து வீட்டும் பரையிமையோர்
விண்பாடுஞ் சீர்த்திநன் மாதன்னபூரணி மெல்லடியை
விண்பாடும் பேறன்றி யார்பாடு வாரிந்த மேதினியே. கஎ

காட்டுஞ் சிறந்திடுந் தில்லையு மாடிக் களித்தவடி
காட்டுங் கனிந்தெனக் கென்குறை யேகன்னி காவல்செய்த
நாட்டும் புனற்செறி நாட்டுந் திகழ்ந்திடு நங்கையருள்
நாட்டும் மெனக்கன்ன பூரணி யாமிந்த நானிலத்தே. கஅ

ஆறும் பிறைவ ணறுகாத்தி கொன்றை யணியிறைவ
னூறும் படுமுலை சேர்த்திடு வாளளை யண்டமிடை
யூறுந் தொலைந்திடு மாதன்ன பூரணி யொண்பதத்தி
லூறுந் தனிமது வுண்டெக் களித்தங் குலவுவனே. கசு

நாடுங் கடைக்கண் ணருளா லெனையிந்த நாடுநற்பொன்
னோடும் பணிய நலமளிப் பாளினி நானிடையேன்
வீடுந் தருமெனக் கெம்மன்ன பூரணி வெஞ்சமன்றுன்
வீடும் படிக்கருள்தானே புரிந்தெனை மேவுவளே. உ0

வேறு—கலிநிலைத்துறை.

வைய மேழையு மேழையு மேமணி வயிற்றிற்
பைய வேகருவின்றியே யளித்திடும் பாவை
மையனீக்கிடு மாதன்ன பூரணி மலர்த்தா
ளைய மேயிலை வாழ்வதற் கென்னருந் தவமே. உக

நீல வாள்விழி மாதன்னபூரணி நிமலி
கோல வாள்விடு மேனியள் குனித்திடு நடத்திற்
கால வாவிடுமென்னக மதைத்தரக் களிப்பாள்
சால வாழ்விதன் மேலினி மற்றிலைத் தவமே. உஉ

அரும்பு மூரா லு மளிதரு செங்கணு மணிசேர்
சுரும்புமூசிடு கார்குழற் றேகையுஞ் சொரியுங்
கரும்புமேவிடு தேமொழி யினிமையுங் காண
வரும்புமீதினி லெம்மன்ன பூரணி மயிலே. உஙு

தொடியுலாவிடு செங்கையுஞ் சூழியச் செறிவுங்
கடியுலாவிடு கொங்கையுங் காழ்பணி வடமும்
பிடியுலாவிடு நடையொடு மதுமலர் சொரியு
மடியுலாவிடு மன்ன பூரணி யெனதகமே. ௨௪

பாதி மேனியை யிறையவ னிறைகொளப் பரிந்தாள்
சோதி மேனிய ளாமன்ன பூரணித் தோகை
யாதி மேனியை யறிபவ ரார்மறை யறியா
தோதி மேனியும் வாடுவ தூதுவறி மனமே. ௨௫

செச்சை மாபுயன் சேவலன் தோகையன் பாதம்
வைச்ச மேனியள் மாதன்ன பூரணிமலர்த்தா
ளிச்சை மேயினர் வேறெவை நேடுவரிறையுங்
கொச்சை யாயினர் தன்மையைக் கூ ௨௬

சற்று மோய்விலா துழன்றலைந் திடுந்தனி மனமே
பற்று வாயன்னபூரணி மாமலர்ப் பதத்தை
முற்று நோயெலாம் போக்கியே வீட்டினை முனைந்து
துற்று நேரவே புகுத்திடு முறுதியிச் சொல்லே. ௨௭

கான லைப்பெரு நீரென வலைந்திடுங் கலைபோ
லேனலைப் புறல்தாயன்ன பூரணி யிணைத்தாள்
வேனலைப் படுத் தின்பவீ டளித்திடு மேன்மை
தானலைப்பிணி யில்லையாள் மன மினித்தருக்கே. ௨௮

நன்னெறிப்புகுந் தார்வமீக் கூர்ந்திடும் நவைய
புன்னெறிப்புகுந் தார்கிலா வென்மனப்பொருளே
பன்னெறிப்புகுந் தார்க்குறு வன்னபூரணிபால்
மன்னெறிப்புகுந் தார்ந்திட வெழுந்திரு மகிழ்ந்தே. ௨௯

புன்மை போக்குவ ளாயன்னபூரணி புலனின்
வன்மை நீக்குவண் மனமகிழ்ந் தடிமலரளித்து
நன்மை யாக்குவணுனில முனைத்தொழ நயந்தே
தன்மை யாக்குவண் மனமுனக் கென்குறை சாற்றே. ௩0

## வேறு—கட்டளைக் கலிப்பா.

ஆரணத்த னனந்தன் றனைத்தரு
மண்ணன் மாதவன் சோதரியாமனை
வாரணத்தன் வனத்தன் றனைத்தரு
மங்கை மாதன்னபூரணி மாமகக்

காரணத்தன் கனத்தன் பராவிடுங்
 கான்மலர்ப் பதநண்ணி யனுதின
மோணத்தன் மனத்தன்பு செய்திடி
 லேதுமோர் குறையில்லை யென்னெஞ்சமே. ௯௧
வேதம்நாளும் விரைந்து துருவியே மேவிநாடிட
 வின்றுந் தெரிதாரப்
பாதம்நாளும பராவிப் பணிந்து புன் பாதகந்
 தெறற்கே யருள்செய்குவாள்
சீதம்நாளுஞ் செறியுந் திருமுகச் செல்வி
 மாதன்ன பூரணியாயியே
யேதம்நாளும பணிந்தகன் றேகுமே யேழை
 நெஞ்சக மேகளித் தார்வமே. ௯௨
மட்டு நேர்மொழி மாதன்ன பூரணி
 மங்கைசங்கரி சிங்கநல்வாகினி
பிட்டு நேர்பெற மண்சுமந்திட்டதோர்பித்த ஞர்க்குச்
 சுகந்தரு நாயகி
கட்டு நேர்குழற் கன்னியெந தாயிரு காலி
 னேர்வுறும் வாழ்வுகிடைக்குமே
லெட் டுநேர்தரு சித்திகள் யாவுமே யென்றன்பாதம
 பணிந்து வணங்குமே. ௯௩
காமனுக்குங் கரிய கடாமிசை காலனக்கை
 கதைகொடு மேவிடு
மேமனுக்குங் கலங்கி வருந்துதற் கென்னை
 விட்டிடாதோ யருள்செய்குவாள்
மாமனுக்குங் கதியளித் தின்பருள் மங்கை
 மாதன்னபூரணி யெம்மைதான்
பூமனுக்குங் கழறனைக் காட்டிடாள் பூமலர்ப்பதம்
 போற்றி யிருப்பளே. ௯௪
அஞ்சமஞ்சந் தனிநடை யாயிழை யன்ன பூரணி
 மாதுமை பாதமே
நஞ்சமஞ்சங் கருவிழி மாதரார் நாடவங்கள்
 செயலை யளிக்குமாற்

கஞ்சமஞ்சுந் திருவடி தன்னையே காணவிஞ்சும்
படிமனம் வைப்பிரேல்
வஞ்சமஞ்சுங் கருமை வடிவுளான் வாடியஞ்சி
வணங்கி யகல்வனே. ௫௫
பத்தியெட்டும் படிபுரிந் தண்டினூற் பாவைமா
தன்ன பூரணி பாதமேற்
சித்தியெட்டுந் தணிந்தெமை வந்தனஞ் செய்து
நாளும்பராவி யணுகுமால்
அத்தியெட்டும் பொறுக்குந் திசையெலா மாடையாக
வணிந்தவ ளின்புறு
முத்தியெட்டும் படிக்கருள் செய்குவாண் மோகமெட்டும்
படிக்கு முயல்விரே ௫௬
ஏகநாயகி யெம்மன்ன பூரணி யீசனார்
திரு வுள்ளத்தி லூறிடும்
மோகநாயகி யண்டங்கள் யாவிற்கு மூல நாயகி
யாதி பராபரை
நாகநாயகி மேனை வளர்த்திட்ட ஞான நாயகி
நல்லடி யாருணும்
போகநாயகி மாமறை தேடிடும் பூதநாயகி
பொன்னடி போற்றுவாம் ௫௭
தூயமாதவ ருள்ளத் தளிதனிற் றோன்று
மாதன்னபூரணி யேழையென்
னேயமான மிவர்ந்தருள் செய்திடு நேசி
நின்மலசோதி யுருவுளாள்
சேய மாமலர்ப் பாதந் தலைமுடி சேர்த்து வாழத்
தவஞ்செய்த சீலர்கள்
காயமான தங்கம தாகியே காழ்தருங் கைலைப்
பதி சார்வரே. ௫௮
மாலை மேனியன் மீதி லிறைகொளு மங்கை மா
தன்னபூரணி பாதநன்
மாலை யேயென வென்றன் றலையுற வைத்து
நீறு மலவலி நீக்குவாள்

வேலை மேனியன் சோதரி யானையை வேலனைப்
பயந் தாளெனக் கன்னையால்
வேலை மேவிநன் றின்புறு மாமதி வேண்டினே
னருள் செய்து புரப்பளே.
சங்கம் வைத்துத் தமிழைப்புரந்தவள் தன்னர
[illegible] யாதிக் [illegible]
சிங்க முற்றுத் திசையைப் புரப்பவள்தேவி
மாதன்னபூரணி பாதத்திற்
றங்க வைத்துக் களிப்பளித் தாளுவாள்
தாழ்விலாது வளர்குவைநெஞ்சமே
துங்க மெய்த்தவர் தோழமை யாகுவாய் சொந்த
மன்னவள் பாதந் தலைக்கொளே

நாற்பா நாற்பஃது முற்றும்.

## பிரபந்த விவரம்.

திருவார் கும்மிச் சீர்நூற் றைம்பத்
திருபா வாகு மெழின்மிகு மாலைத்
தொடை நூற்றொன்றுந் துதித்திடும் போற்றிக்
கலிவெண்பா விருநூற் றிரு கண்ணியாம்
பண்படி மடக்குப் பதினொன் றுகும்
ஒருபா வொருபஃ திருபா விருபஃது
முப்பா முப்பஃது நாற்பா நாற்பஃதும்
ஆகத்தொகை யைஞ்ஞூற் றறுபத் தாறும்
சத்திய புத்தியாய்த் தமதகங் கொண்டு
பத்தியா யுரைப்போர் படிப்போர் கேட்டோ
ரேவரு மின்புற் றிறையடி யதனி
லோவா திறுதியி லுற்றுவாழ் குவரே.

முற்றும் சுபம்.

ஸ்ரீ அன்னபூரணி அம்பா
திருவடி வாழ்க.

கல்லல் ஸ்ரீமணிவாசக சரணாலய சுவாமிகள் இயற்றிய
பிரபந்தங்கள்.

| | | |
|---|---|---|
| | | ரூ. அ. பை. |
| 1. | ஸ்ரீ முருகக்கடவுள் சோடசப்பதிகப் பிரபந்தம் | விலை 1—0—0 |
| 2. | அன்னபூரணியம்மை அட்டப்பிரபந்தம் | ,, 0-12—0 |
| 3. | திருக்கருவைப் பதிகங்கள் | 0—4—0 |
| 4. | ஸ்ரீ முருகக்கடவுள் விண்ணப்பக்கலிவெண்பா | ,, 0—2—0 |
| 5. | செந்தமிழ் நாட்டுச் சிறப்பு | ,, 0—1—0 |
| 6. | சேற்றூர்ப் பதிகங்கள் | ,, 0—4—0 |

இவை ஷெ சுவாமிகளிடம் கிடைக்கும்.

திருச்சிராப்பள்ளி, பிஷப் ஹீபர் காலேஜ் தலைமைத் தமிழாசிரியர்
பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் இயற்றிய
அரிய ஆராய்ச்சி நூல்கள்.

| | | |
|---|---|---|
| | | ரூ. அ. பை. |
| 1. | கபிலர் | விலை 1—4—0 |
| 2. | நக்கீரர் | ,, 0—8—0 |
| 3. | வேளிர் வரலாற்றின் ஆராய்ச்சி | ,, 0—3—0 |
| 4. | கள்ளர் சரித்திரம் (இது பொதுவாகத் தமிழ் மக்களின் வரலாற்றையும், சிறப்பாகக் கள்ளர் குலத்தாரின் வரலாற்றையும், தேச சரித்திரங்கள், கல் வெட்டுக்கள், பழந் தமிழ் நூல்கள் முதலியவற்றைக்கொண்டு விரிவாக ஆராய்ச்சிசெய்து எழுதப்பெற்றது. 350 பட்டப்பெயர்கள் இதன் இறுதியில் அகராதியாகக் காட்டப்பெற்றுள்ளன) | 1—0—0 |

அகத்தியர், சோழர் சரித்திரம், ஒட்டக்கூத்தரியற்றிய உலாக்கள் இவை விரைவில் வெளிவரும்.

இவை பண்டிதர் ந. மு. வே. நாட்டாரவர்களிடத்திலும், சென்னை, திருநெல்வேலி முதலிய இடங்களிலும் விலைக்குக் கிடைக்கும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.